# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
8.10.2006 ரூ.8.00
80 பக்கங்கள்



# மனதோடு மழைக்காலம்



நட்பின் மேன்மையைத் தூக்கி நிறுத்தற இன்னொரு படம். விக்ரமனோட 'புது வசந்தம்' படத்தை ஞாபகப் படுத்தினாலும் ட்ரீட்மென்ட் வேற. கவிதையான தலைப்பு மாதிரியே படத்தையும் கொடுக்க ட்ரை பண்ணியிருக்காங்க.

ஷாம் கல்லூரி இளைஞனா நல்லா நடிச்சிருக்கார். ஆனா வயதான கெட்டப் அவருக்குப் பொருந்தவே இல்ல. அவரே வயசாகியும் இளைஞன் மாதிரி இருக்கும்போது, அவருக்கு மகன், பேரன்னு காட்டறது டூ மச்! பாத்திரத் தோட கனத்தைச் சுமக்க முடியாம தள்ளாடுறார் பாவம். மேக்கப்மேன் தூங்கிவிட்டாரோ!

சமீக்ஷா ஜாலிப் பட்டாசு. ஷாமுக்காக ஐஸ்க்ரீமா உருகறதும், எல்லாம் கைகூடி வந்ததும் சோகமா அடங்கிடுறதும் டச். புதுமுகம் நித்யாதாஸ் அழகான குள்ளவாத்து. ஸ்கிப்பிங் ஆடி உயரமாகுங்க மேடம். குடும்பக் கதைங்க தேடி வர்ற அதிர்ஷ்டம் இருக்குங்க அம்மணி! காலேஜ் காட்சிங்க கலகலன்னு, நம்மள ஃப்ளாஷ்பேக்குக்கு கூட்டிப் போனாலும், ஏனோ பார்த்த காட்சி மாதிரியான ஃபீலிங் வர்றதைத் தவிர்க்க முடியல. புரொஃபசரா வர்ற டிபிகஜேந்திரன் சிரிப்போடு சிந்திக்கவும் வைக்கறார்.

கார்த்திக்ராஜா இசையில 'பட்டர்ஃபிளை' பாட்டு மட்டும் ஓ.கே. அடுத் தடுத்த காட்சிகள் என்னன்னு யூகிக்க முடியறது திரைக்கதை பலவீனம். பலம், ஆண் - பெண் நட்பை ஏத்துக்கற பெற்றோரையும் கணவனையும் நண்பர்களையும் திரையில காட்டியிருக்குற நல்ல முயற்சி. அதே நேரத்துல படத்தை ரொம்ப இழுத்ததுக்காக டைரக்டர் அற்புதனை தாராளமா குட்டலாம். கல்லூரி கால நண்பர்கள் எல்லாரும் கடைசி காலம் வரைக்கும் ஒரே ஏரியால இருக்கறது சினிமாவுல மட்டும்தான் சாத்தியம்!

- லஜ்ஜாவதி

"அண்மையில் ஒரு நிகழ்ச்சியில் பத்மினியைச் சந்தித்த ஒரு நடிகையிடம், அவர் மனவேதனைப்பட்டு சொன்ன விஷயம் என்னை மிகவும் வருத்தமடையச் செய்தது. 'ஒரு நாட்டியத் தாரகையாக என் நடனத்தைப் பார்த்து, ஜவாஹர்லால் நேரு, எலிசபெத் மகாராணி தொடங்கி பலரும் ரசித்துப் பாராட்டி இருக்கிறார்கள். சினிமா உலகில் எத்தனை படங்கள்! எத்தனை மொழிகள்! எத்தனைவிதமான கதாபாத்திரங்கள்! இன்றைக்குக்கூட பத்மினி மிகவும் மனம் வருந்தினாராம் பத்மினி. அவருடைய வருத்தம் மிகவும் நியாயமானது" என்கிறார் பழம்பெரும் இயக்குநர் முக்தா ஸ்ரீனிவாசன்.

"கே.பி.சுந்தராம்பாள் மறைந்த சமயத்தில் அவரது உடலை நடிகர் சங்கத்துக்கு எடுத்து வந்து வைத்து, கலைக் குடும்பத்தினர் அனைவரும் அவருக்கு மரியாதை செலுத்த வழி செய்தார்



# என்னை மறந்துட்டாங்களே...

என்றால் ரசிகர்கள் மறந்துவிடவில்லை! ஆனால் அரசாங்கம் என்னை உரிய முறையில் மதித்துக் கௌரவிக்கவில்லை என்ற மன வருத்தம் எனக்கு உண்டு. பத்மஸ்ரீ, பத்மபூஷன் என்று ஆண்டுதோறும் பலருக்கு விருதுகளைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் என் பெயர் யாருக்கும் நினைவுக்கு வருவதில்லையே!' என்று

எம்.ஜி.ஆர். இப்போதெல்லாம் எவ்வளவு பெரிய கலை உலகப் பிரமுகர் இறந்தாலும் பேப்பரில் செய்தி வருகிறது. டீ.வி.யில் சில வினாடிகள் காட்டுகிறார்கள். மற்றபடி அந்த மரணம், மறைந்தவரின் குடும்ப விஷயம் என்பதுபோல அத்துடன் நடிகர் சங்கம் கைகழுவி விடுகிறது. இதுதானா சக கலைஞருக்கு நடிகர் சங்கம் செய்யும் கௌரவம்?

லலிதா, பத்மினி, ராகினி சகோதரி

# நினைவு

**நா**ன் அமெரிக்காவில் இருந்தபோது ஒரு விழாவில் பத்மினி அவர்களைச் சந்தித்தேன். ஏற்கெனவே அவரைப் பேட்டி எடுத்திருந்ததால் என்னிடம் சகஜமாகப் பேசினார். 'உங்களின் எதிர்காலத் திட்டமென்ன?' என்றேன் அவரிடம்...

'விரைவிலேயே இந்தியாவுக்கு, என் தமிழ்நாட்டுக்குச் சென்று செட்டிலாக வேண்டும். என் உயிர் தமிழ் மண்ணில் பிரிய வேண்டும்' என்றார் பத்மினி. அப்படித்தான் நடந்திருக்கிறது!

- நளினி சம்பத்குமார்

களின் குடும்பத்தை நான் சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அறிவேன். குறிப்பாக 1955 முதல் 1965 வரை ஆண்டுக்கு சுமார் அறுபது தமிழ்ப்படங்கள் வெளியாகும். அவற்றில் ஐம்பது படங்களில் இந்தச் சகோதரிகளின் நாட்டியம் இடம்பெறும். ஆனாலும் அவர்களுக்குத் துளியும் பந்தா கிடையாது. இவ்வளவு பணம் தர வேண்டும் என்று அவர்கள் கறாராகப் பேசியது இல்லை. சில சமயங்களில், அவர்கள் சம்பந்தப்பட்ட பாடல் காட்சி எடுத்து முடிக்கப்பட்ட பிறகும் அவர்களுக்குப் பணம் தருவதில் தாமதமாகும். அவர்களுடைய தாய் சரஸ்வதி அம்மா, 'அதனால் என்ன? படம் முடிகிறபோது நீங்கள் பணத்தைக் கொடுக்கலாம்' என்பார். பத்மினியைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு இந்த ஞாபகம்தான் வரும்" என்று பத்மினி பற்றி நெகிழ்ச்சியுடன் குறிப்பிட்டார் முக்தா சீனிவாசன்.

- கௌதம்ராம்


■ முக்தா சீனிவாசன்



# கல்கி
ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர் : மு.மாறன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன், ச. கார்த்திகேயன்

தொலைபேசி : 2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் : 044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

அகமதாபாத்திலுள்ள இந்திய மேலாண்மை நிறுவனத்தில் சிறப்புரை ஆற்ற, வரலாற்றிலேயே முதல் முறையாக ஓர் அரசியல்வாதி அழைக்கப்பட்டார். அவர் ரயில்வே அமைச்சர் லாலு பிரஸாத் யாதவ்! இந்திய ரயில்வேயின் லாபம் செய்துள்ள ஜாலம் இந்த அழைப்பு!

மொத்தம் 64000 கி.மீ. நீள இருப்புப் பாதை; தினசரி ஒன்றரைக் கோடி மக்கள் பயணம்; கிட்டத்தட்ட 16 லட்சம் ஊழியர்கள். உலகிலேயே ஒரே நிர்வாகத்தின் கீழ் இயங்கும் பெரிய ரயில்வே கட்டமைப்பைக் கொண்ட நாடு இந்தியா தான். வருமானத்தில் பாதியைச் சம்பளமாக வழங்குவது, புற்றீசலாக இருக்கும் ஊழியர் சங்கங்களின் கெடுபிடிகள், மக்களை நம்பிக்கையிழக்க வைக்கும் விபத்துகள், ஊழல், லஞ்சம் என்று ஓர் அரசுத் துறைக்கே உள்ள சகல லட்சணங்களோடு இயங்கி வந்த ரயில்வே துறை, கடந்த நிதியாண்டில் 13000 கோடி ரூபாய்க்கு மேல் இலாபம் சம்பாதித்தது! அரசு முதலீடு செய்துள்ள பணத்துக்கு டிவிடண்டாக 3668 கோடியினைக் கொடுத்திருக்கிறது!

2003-04ஆம் நிதியாண்டில் ரயில்வே 100 ரூபாய் சம்பாதிப்பதற்கு 92 ரூபாய் செலவழிக்க வேண்டியிருந்தது. ஆனால் கடந்த 2005-06 நிதியாண்டில் இது 83 ரூபாயாகக் குறைந்துவிட்டது. இந்தக் கணக்கை 'ஆபரேஷன் ரேஷியோ' என்கிறார்கள். இது குறையக் குறைய லாபம் கொழிக்கும்; கொழித்துக் கொண்டிருக்கிறது.

"இந்த வெற்றி தொடரும்" என்கிறார் விஜயலட்சுமி விஸ்வனாதன். இந்திய ரயில்வேயில் நிதி ஆணையராகப் பணியாற்றிச் சென்ற வருடம் ஓய்வு பெற்றவர். அதற்கு முன் மூன்று ரயில்வே பட்ஜெட்டுகள் தயாரிப்பில் இவருக்குப் பெரிய பங்கு இருந்திருக்கிறது.

"1998ஆம் ஆண்டுக்கு முன்னால் இந்திய ரயில்வேயின் நிதிநிலை மிக நன்றாகவே இருந்தது. ஆபரேஷன் ரேஷியோ 84 ரூபாயாக இருந்தது. 1998ஆம் வருடத்துக்குப் பின்னர் நிதிப் பற்றாக்குறை ரயில்வேயைத் தாக்கத் துவங்கிவிட்டது. இதற்கு மிக முக்கியக் காரணம் ஐந்தாவது சம்பள கமிஷனின் சிபாரிசுகளை அமல்படுத்தியதுதான். ரயில்வேயில் ஊழியர்கள் சம்பளம் மற்றும் பென்ஷன் ஆகியவற்றுக்கு மட்டும் வருமானத்தில் சராசரி 44 சதம் செலவாகிறது. இந்த நிலையில் சம்பள கமிஷன் சிபாரிசுகளை அமல்படுத்தியதால், ஊழியர்களுக்கான செலவு இரட்டிப்பாகிப் போனது. இந்தத் தாக்கத்தின் காரணமாக 2000-01 மற்றும் 2001-02ஆம் ஆண்டுகளில் மத்திய அரசுக்கு டிவிடெண்ட் (இதை ஒரு விதத்தில் அரசுக்குக் கொடுக்கும் வட்டி என்றும் சொல்லலாம்) கொடுக்க முடியவில்லை. இப்படிப்பட்ட கஷ்ட சூழலில் இருந்த ரயில்வேயைக் கைதூக்கிவிட வாஜ்பாய் பிரதமராக இருந்தபோது 2001ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஒரு திட்டம் திட்டப்பட்டது. அந்தத் திட்டத்தின் பெயர் 'ரயில்வே சிறப்புப் பாதுகாப்பு நிதி'. அதன்படி 12000 கோடி அரசு கொடுக்கும். மீதி 5000 கோடி பாதுகாப்பு





• பயணிகள் நலன் நாடும் லாலு....



சர்சார்ஜ் என்று போட்டுப் பயணிகளிடம் வசூலிக்க வேண்டும். இந்தத் திட்டத்தை ரயில்வே வரலாற்றின் திருப்பு முனை எனலாம்.

இந்தச் சிறப்புப் பாது காப்பு நிதி காரணமாக, ரயில்வேயின் கொள்திறன் அதிகப்படுத்தப்பட்டது. சொத்து மதிப்பு ஏறியது. பாதைகள் சீர மைக்கப்பட்டன. அதிக எடையைத் தாங்கக்கூடிய அளவில் மேம்படுத்தப் பட்டன. பாலங்கள் பழுது பார்க்கப்பட் டன. நவீன தொழில்நுட்பத்தின் அடிப் படையில் சிக்னல்கள் மாற்றப்பட்டன. பயணிகள் மற்றும் சரக்கு ரயில் களின் வேகம் அதிகரிக்கப்பட்டது. ரயில் பெட்டிகள் மற்றும் சரக்குப் பெட்டிகள் தயாரிப்பில் புதிய தொழில்நுட்பங்கள் கொண்டுவரப்பட்டு, அடிக்கடி பழுதுபடு வது தவிர்க்கப்பட்டது. இதனால் பரா மரிக்கும் செலவு குறைந்தது. இந்தச் சூழ லில் ஐ.மு. அரசு பதவிக்கு வந்தது. லாலு ரயில்வே அமைச்ச ரானார். ரயில்வே துறையில் மாற்றங் களுக்கும், மேம்பாடு களுக்கும் பச்சைக் கொடி காட்டினார். அதனால் சுதந்திரமாக இயங்க முடிந்தது.

# லாலு எக்ஸ்பிரஸ்!



ரயில்வே துறை யின் வருமானத்தில் 65 சதம் சரக்குக் கட்ட ணம் மூலம் வருவது





• வேலு

தான். எனவே அதை அதிகப்படுத்தும் முயற்சியில் இறங்கினோம். சரக்குப் பெட்டியின் தாங்கும் கொள்ளளவு அதிகரிக்கப்பட்டது. 52 டன் எடை மட்டுமே எடுத்துச் சென்ற சரக்குப் பெட்டி, மேலும் எட்டு டன் அதிகமாக எடுத்துச் செல்ல அனுமதிக்கப்பட்டது. இது சாத்தியமானதற்கு மற்றொரு காரணம் சிறப்பு நிதித் திட்டத்தின் கீழ் அடிப்படைக் கட்டுமான வசதிகள் பலப்படுத்தப்பட்டதும் மேம்படுத்தப்பட்டதும்தான். சரக்குப் போக்குவரத்தில் பெரிய பங்கு வகிப்பது இரும்புத் தாது, நிலக்கரி, சிமெண்ட் போன்றவை. இதில் ஏற்றுமதி செய்யப்படும் இரும்புத் தாதுவுக்கு மட்டும் சரக்குக் கட்டணம் ஓரளவு ஏற்றப்பட்டது. சரக்குப் போக்குவரத்து பத்து லட்சம் டன் அதிகமானால் ரயில்வேக்கு 52 கோடி வருமானம் கூடும். சரக்குப் போக்குவரத்தில் பல சலுகைகள் கொடுக்கப்பட்டன. போக்குவரத்து அதிகமில்லாத காலகட்டங்களில், சரக்குப் பெட்டிகளைப் பயன்படுத்துவோருக்குப் பல சலுகைகள் வழங்கப்பட்டன. இதன் காரணமாக காலியாக எந்தப் பெட்டியும் முடங்கிவிடாமல், முற்றிலுமாக அவை பயன்படுத்தப்பட்டன. சரக்குப் போக்குவரத்தில் தத்கால் முறை அமல்படுத்தப்பட்டது. சரக்கு ரயில்களின் வேகம் அதிகரிக்கப்பட்டது. இப்படிப்பட்ட நடவடிக்கைகளின் காரணமாக 2003-04-ல் 27,681 கோடியாக இருந்த சரக்குப் போக்குவரத்து வருமானம், 2005-06ல் 36,590 கோடியாக உயர்ந்து விட்டது.

இதேபோல் பயணிகள் போக்குவரத்தில் தத்கால் முறையினால் கூடுதல் வருமானம் பெறப்பட்டது. போக்குவரத்து அதிகமாக உள்ள பிரிவுகளில் சிறப்பு ரயில்கள் விடப்பட்டன. எனவே 2003-04-ல் 13298 கோடியாக இருந்த பயணிகள் போக்குவரத்து வருமானம், 2005-06-ல் 15,130 கோடியாக உயர்ந்தது. நடப்பு நிதியாண்டில் இது 16000 கோடியைத் தொடக்கூடும்.

இவ்வாறு வருமானம் உயர்ந்ததால், பயணிகள் கட்டணத்தில் சின்னச் சின்ன மாற்றங்களைத் தவிர பெரிய அளவில் உயர்த்த வேண்டிய அவசியம் நேரவில்லை. இந்தக் காலகட்டத்தில் டீஸல் விலை பல மடங்கு உயர்ந்தும்கூட ரயில்வே கட்டணம் ஏறவில்லை. இதற்குக் காரணம் டீஸலின் தேவை குறைக்கப்பட்டதுதான். அதற்கு மாற்றாக பாதைகள் மின்மயமாக மாற்றப்பட்டு, மின்சார இன்ஜின்கள் பயன்படுத்தப்பட்டன. மாநிலங்களில் உள்ள மின்சார ஒழுங்குமுறை வாரியங்களுடன் பேசி சலுகை விலையில் மின்சாரம் வாங்கப்பட்டது. இத்தகைய ஒட்டுமொத்த நடவடிக்கைகளால் ரயில்வே துறை லாலு தலைமையில் ஜாம், ஜாமென்று ஓடுகிறது" என்கிறார் விஜயலட்சுமி விஸ்வநாதன்.

"கடந்த 1991ல் அறிமுகப்படுத்தப்பட்ட புதிய பொருளாதாரக் கொள்கையும், தாராளமயமாக்கலும் தான் இத்தனை வருடங்கள் கழித்து பலனைத் தருகின்றன" என்கிறார் ஓய்வு பெற்ற ரயில்வே பொது மேலாளரான ராம்ஜி.

"நாட்டின் மொத்த வளர்ச்சி விகிதம் திருப்திகரமாக இருப்பதால்

• ராம்ஜி



• விஜயலட்சுமி விஸ்வநாதன்



ரயில்வே துறையிலும் இலாபம் கொழிக்கிறது. வளர்ந்து வரும் தொழில் நுட்பத்தை முழுவதுமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம்.

ரயில்வே துறை ஊழியர்களின் கண்ணோட்டம் முற்றிலும் மாறியிருக்கிறது. சந்தைப் பொருளாதாரம் மாறியிருப்பதையும் சவால்களைச் சந்திக்க வேண்டியதன் அவசியத்தையும் உணர்ந்திருக்கிறார்கள். 2000-01-ல் 464 விபத்துகள் நடந்தன. சென்ற ஆண்டில் 232 விபத்துகளாகக் குறைந்திருக்கிறது. அதேசமயம் 16 லட்சமாக இருந்த ஊழியர்களின் எண்ணிக்கை பதினான்கரை லட்சமாக குறைந்து விட்டது. கேப்டன் என்ற முறையில் லாலுவுக்கும் பெருமை செய்வது பொருத்தமே" என்கிறார் ராம்ஜி.

**'வெற்றியில் மிதக்கும் ரயில்வே துறைக்கு சவால் காத்திருக்கிறது.'**

"ரயில்வே துறையில் ஊழியர்களின் எண்ணிக்கை குறைந்தாலும் பயணிகள் மற்றும் சரக்குப் பாதுகாப்பு விஷயத்தில் எந்த சமரசமும் கிடையாது. அந்த வகையில் தேவைக்கேற்ற ஊழியர்கள் இருக்கிறார்கள்" என்கிறார் ரயில்வே இணையமைச்சர் வேலு. ரயில்வேயின் வெற்றிப் பாதையில் இவருக்கும் பங்குண்டு.

"புதுப் புது யோசனைகள் அளிப்பதோடு, மாற்றங்களுக்குத் தயாராக இருந்து, அதிகாரிகளுக்குச் சுதந்திரமும் கொடுக்கிறார் அமைச்சர்" என்கிறார் அமைச்சர் லாலுவின் சிறப்பு அதிகாரி கதிர்குமார்.

வெற்றிப் பெருமிதத்தில் மிதக்கும் ரயில்வே துறை ஊழியர்களுக்கு ஆறாவது சம்பள கமிஷன் அமைக்கப்பட்டுள்ள நிலையில், அதன் தாக்கத்தை எவ்வாறு சந்திக்கும்?

"அது ஒன்றும் பெரிய பிரச்னை அல்ல; சமாளிப்போம். அதே சமயம் காலியான இடங்களுக்கு ஆட்களையும் நியமிப்போம். வெற்றி வரலாறு தொடரும்" என்று நம்பிக்கையுடன் சொல்கிறார் வேலு.

- ப்ரியன்

# ஒரே பட்டுப் புடவையில் இரண்டு புடவைகள்

இந்தப் பட்டுப்புடவையின் மறுபக்கம் என்ன இருக்கு... அட... இன்னொரு பட்டுப் புடவை!! ஆரெம்கேவியின் புத்தம்புது ரிவர்ஸிபிள் பட்டுப்புடவையோடு தீபாவளியைக் கொண்டாடுங்கள்! இதற்காகவே உருவாக்கப்பட்ட தறிகளில், ஆரெம்கேவியின் கைதேர்ந்த நெசவாளர்களால் நெய்யப்பட்ட ஒவ்வொரு புடவையும் பிரமிப்பூட்டும்! இந்த தீபாவளிக்கு ஆரெம்கேவியில் உங்கள் ரிவர்ஸிபிள் பட்டுப் புடவையைத் தேர்ந்தெடுங்கள். அழகாக ஜொலித்திடுங்கள்.

'என்னோட ஒரே பட்டுப் புடவையில்
இரண்டு புடவைகள்!'





சென்னை மேற்கு மாம்பலத்தில் சரஸ்வதி மேரேஜ் கேட்டரிங் சர்வீஸ் பரபரப்பாக இருக்கிறது. அதன் உரிமையாளர் ஜி.சுப்பிரமணி ஐயர் இன்னும் பரபரப்பாக இருக்கிறார். ஆர்டர் கொடுக்க வந்தவர்களிடம் காட்டும் அதே ஆர்வத்தையும் உற்சாகத்தையும் விலை விசாரித்து, பிறகு வருவதாகச் சொல்லித் திரும்புவோரிடமும் காட்டுகிறார். அடுத்தடுத்த வேலைகள் காத்திருந்தாலும், யாரையும் காக்க வைக்கும் அலட்சியம் அவரிடம் இல்லை.

"மூன்றாம் தலைமுறை காணும் எங்கள் நிறுவனம், அறுநூறு ஊழியர்களைக் கொண்டது. சுமார் ஆயிரத்து ஐந்நூறுக்கும் மேற்பட்ட திருமணங்களுக்கு சர்வீஸ் செய்துள்ளோம். இருபத்து மூன்று வருட கேட்டரிங் தொழிலில், விருந்தோம்பும் மாண்பையும் உபசரிப்பையும், தரத்தையும் சுவையையும் பிரதானமாகக் கொண்டே நற்பெயர் பெற்று வருகிறோம்.

இந்தத் தொழிலில் காண்ட்ராக்ட் அடிப்படை முறையை அறிமுகப்படுத்தியவர்கள் நானும், மந்தைவெளி ஜெகதீசன் என்பவரும்தான். அதற்கு முன்பு காண்ட்ராக்ட் முறை கிடையாது" என்று நிறுத்தி நிதானமாகப் பேசுகிறார் சுப்பிரமணி ஐயர்.

"ஊழியர்களுக்குச் சீருடைகள், கையுறைகள், குளிர்பானங்கள் தருவதற்கு சீருடையணிந்த பெண்கள், மேற்பார்வையாளருக்கு 'கோட் சூட்' என நேர்த்தியான பல முறைகளை மேற்கொள்கிறோம். 'சரஸ்வதி கேட்டரிங் சர்வீஸ்' நிறுவனம் என்றாலே மக்களிடம் ஒரு வரவேற்பு இருக்கத்தக்க வகையில் பணிபுரிந்து வருகிறோம்.

வெஜ் கான்டினென்டல், ஜைனீஷ் வெரைட்டிகளை சைவத்தில் கொண்டு வந்துள்ளோம். லிச்சி ஸ்வீட்ஸ், பாதம் ஃப்ரூட், அஞ்சீர் எனப்படும் அத்திப்பழ ஸ்வீட், இளநீர்ப் பாயசம், இளநீர்ப் ஃபுட்டிங், செட்டிநாடு வெரைட்டி என ஒவ்வொன்றும் வாடிக்கையாளரின் பாராட்டைப் பெற்று, நாவைக் கொள்ளை கொள்ளும் நளபாக வகைகள் என்றே சொல்ல முடியும்.

1968-ல் உலகத் தமிழ் மாநாடு நடந்தபோது, எனது தந்தையார் குருசாமி ஐயர்தான் அந்த வேலையை ஒப்புக்கொண்டு செய்தார். சி.என்.அண்ணாதுரை அவர்கள் என் தந்தையாரின் தொழில் நேர்த்தியைப் பாராட்டிக் கொடுத்த சான்றிதழ் இன்னும் எங்களது வெப்ஸைட்டில் உள்ளது.

அன்று தொடங்கி நீதிபதிகள் பாலசுப்பிரமணியன், ஜெகதீசன், அசோக், முன்னாள் முதல்வர் ஜெயலலிதா, ஏவி.எம். சரவணன், ஓ.பன்னீர்செல்வம், விஜயகாந்த், பிரசாந்த் போன்றவர்கள் எங்கள் நிறுவனத்தின் கஸ்டமர்கள் என்பதில் பெருமை கொள்கிறோம்.

ஆரம்பத்தில் பதினைந்து பேர் மட்டுமே இங்கு பணிபுரிந்தார்கள். அவர்களையும் எங்கள் சொந்த ஊரான தஞ்சை மாவட்டத்திலிருந்து கொண்டு வந்தே வைத்திருந்தோம். வாடகைக்கு ஒரு இடம் எடுத்து, மிகுந்த பொருளாதாரக் கஷ்டத்திற்கிடையில் தொடங்கிய ஆரம்பம்தான் எங்களுடையது.

என் தந்தையார் செய்த இந்தத் தொழிலில் எனக்கிருந்த ஆர்வமும் தூண்டுதலும் என்னை இந்த அளவுக்குக் கொண்டு வந்து சேர்த்துள்ளன. இது மேலும் பல்கிப் பெருகி ஓர் ஆலவிருட்சம்போல் பரவ



"முடியாது என்பது மூடத்தனம்; முடியும் என்பது மூலதனம்!"



* சுப்பிரமணி ஐயர்

வேண்டும் என்பதே எனது விருப்பம். தகுந்த, தேவையான இடங்களில் கிளைகளை நிறுவி, இந்தத் தொழில் தெரிந்த நிறைய இளைஞர்களுக்கு வாய்ப்பு தர வேண்டும் என்பது எனது நீண்டகால ஆசை!

பொதுவாக கயிறுமேல் நடப்பதைப் போல் பணிபுரிய வேண்டிய தொழில் இது. அந்த அளவுக்கு வாடிக்கையாளர்களைத் திருப்தி செய்ய வேண்டிய அவசியம் உள்ளது. அந்த அவசியத்தின் அக்கறையை உணர்ந்து பணியாற்ற வேண்டும்.

காஞ்சிப் பெரியவரின் திருப்பெயரைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட எங்கள் நிறுவனம், இதுவரை சுமார் 1500 திருமணங்களில் பணிபுரிந்து நற்பெயர் பெற்றுள்ளது. வருங்காலத்தில் ஓட்டல் போன்ற துணைத் தொழில்கள் தொடங்கும் முயற்சிகளிலும் உள்ளோம்.

எந்தத் தொழிலையும்விட இந்தத் தொழிலில் ஆத்ம திருப்தி அதிகம். அந்த திருப்தியை வாடிக்கையாளர்களும் அடைவதற்கேற்ற வகையில் சுகாதாரமான உணவு வகைகளை, உபசரிப்பைத் தந்து உயர்வதே எங்கள் நோக்கம். கட்டாயம் உயர்வோம். ஏனெனில் முடியாது என்பது மூடத்தனம்... முடியும் என்பது மூலதனம்'' என்கிறார் சுப்ரமணி ஐயர்.

**- சிபிமனு**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**



# குருவைத் தேடிப்

சூப்பர் மார்க்கெட்ல 'மிஸ் டேக்' மாத்திரையைப் பத்தி எழுதினது மிஸ் டேக் இல்லாம சீரியஸ் மேட்டர்தான்னு நிரூபணமாயிடுச்சில்லையா... பல மகளிர் அமைப்புகள் கொடுத்த புகாரின் பேர்ல போலீஸ் அதிரடி ஆக்‌ஷன் எடுத்து, அம்பது லட்ச ரூபாய்க்கான மாத்திரை ஸ்டாக்குகளையும் அதை விளம்பரம் பண்ணின பத்திரிகைப் பிரதிகளையும் 'சீஸ்' பண்ணியிருக்கு!



ஹெல்த் மினிஸ்டர் அன்புமணி அறிவிச்சிருக்கிற விஷயம் என்ன தெரியுமா...? அமெரிக்கா + உலக சுகாதார அமைப்பு கூட்டுறவோட இந்தியாவுல ஓர் ஆராய்ச்சி மும்முரமா நடக்குது - கர்ப்பப்பை வாயில் ஏற்படற புற்று நோய்க்கு எதிரான தடுப்பூசி மருந்தைக் கண்டுபிடிக்கிற ஆராய்ச்சி! ஒவ்வொரு வருஷமும் 1.4 லட்சம் இந்தியப் பெண்கள் இந்த நோய்க்கு உள்ளாகறதா பதிவு பண்ணிய தகவல்கள்லேர்ந்து தெரிய வருது. பதிவு பண்ணாமலும், தெரியாமலும் தொடர்ந்து அவதிப்படறவங்க எண்ணிக்கை ரொம்ப அதிகம். இந்தத் தடுப்பூசி ஆராய்ச்சி வெற்றியடைஞ்சா அது பெரிய ஆரோக்கிய புரட்சியா இருக்கும்ன்றார் அமைச்சர்.

பொதுவா தடுப்பூசின்றது கிருமிகளுக்கு எதிராத்தான் செயல்படும். கர்ப்பப்பை வாயில் ஏற்படற கிருமி நோய்த் தொற்று, அந்தப் பகுதியில் தொடர்ந்து நீடிக்கறதாலே அரிப்பு - தேய்மானம் - செல்களின் பெருக்கம் - கேன்ஸர்! இதுதான் பேட்டர்ன். ஆகவே நோய்த் தொற்றுக்கு எதிராதான் தடுப்பூசியே யொழிய கேன்ஸருக்கு எதிரா இல்லை...

இன்னொரு பக்கம் அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் கேன்ஸர் ஆராய்ச்சியையே கவிழ்த்துப் போட்டுட்டாங்க! தியோடோர் போவெரின்னு ஓர் ஆராய்ச்சி விஞ்ஞானி. அவர் 1915ஆம் வருஷமே மெஜாரிட்டில போய்ச் சேர்ந்துட்டார் (அதாங்க மேல் லோகம்). இப்போ, அவர் ஆராய்ச்சி பண்ணி எழுதி வைச்சதையெல்லாம் தூசி தட்டி எடுத்து 'அட, ஆமாங்கடா!'ன்னு அமெரிக்க சயன்டிஸ்ட்ஸ் புது நூல் பிடிச்சு முன்னேறிட்டிருக்காங்களாம் - அதாவது, இது நாள் வரைக்கும், செல்களின் அதீத - அவசர - அனாவசிய பெருக்கமே கேன்ஸருக்குக் காரணம்'ங்கற ஒரு முடிவின் அடிப்படையில் ஆராய்ச்சியும் சிகிச்சையும் நடந்துக்கிட்டிருந்தது. இப்போ போவேரி ரூட் ஆஃப் திங்கிங் என்ன சொல்லுதுன்னா, மரபணு ரீதியாவே சில செல்கள் தப்பாகவும் அதிகமாகவும் பெருக்கெடுக்க வாய்ப்பிருக்கு - ஆகவே மரபணு திருத்த ஆராய்ச்சியும் மருத்துவமும்தான் கேன்ஸருக்குத் தீர்வு!

நியூஸ் பேப்பர்ல படிச்ச ஒரு விஷ



• பழமை போற்றுவோம்!

யத்தையும் சொல்லியாகணும். சென்னைல ஒரு அரசு ஆஸ்பத்திரியில, ஒரு பெண் பிரசவ வலியோட போய் அட்மிட் ஆக முயற்சி பண்ணியிருக்காங்க. யாருமே கண்டுக்கலை. 'மெடர்னிட்டி வார்டுக்குள்ளே நின்னு இடைஞ்சல் பண்ணாதீங்க'ன்னு வெளியே வேற அனுப்பிட்டாங்க. வெராண்டாவிலயே இந்தப் பெண் ரொம்ப நேரம் வலியால துடிச்சுக்கிட்டிருந்து பிரசவமும் ஆயிடுச்சு.

# போன கலாம்!

ஹாஸ்பிட்டல் அதாரிடீஸ்கிட்டே இது பத்திப் புகார் பண்ணினா, "எத்தனையோ பொண்ணுங்களுக்கு வீட்லேயேகூட பிரசவம் ஆயிடுது. இல்லாதுபோனா ஆஸ்பத்திரிக்கு வர்ற வழியில, வண்டியிலேயே குழந்தை பிறந்துடுது..."ன்னு 'சமாதானம்' சொல்லியிருக்காங்க. வெராண்டா பேபீஸ் பிறக்குற இந்த தேசத்துல, இந்த நகரத்துலதான் மெடிக்கல் டூரிஸமும் கொடி கட்டிப் பறக்குது!

போன தடவை வி.விஜயராகவனோட வருத்த கவிதையைப் (கோயில் அசுத்தம் பத்தி) படிச்சுட்டு, மன்ற உறுப்பினர் கோவை, டி.கே.பாலசுப்ரமணியன் பாஸிடிவ்வா ரியாக்ட் பண்ணியிருக்கார். அவரும் மற்ற பலரும் சேர்ந்து உழவாரப் பணி நடத்தறாங்க - ஹிந்து ஆலய பாதுகாப்புக் குழுவின் திருக்கோயில் பக்தர்கள் பேரவை மூலம். இவங்களோட பணி வாழ்க, வளர்க, வெல்கன்னு சொல்லிக்கற அதே நேரத்துல, 'பழந்திருக்கோயில்கள் திருப்பணிச் சங்கம்'னு ஓர் அமைப்பு வொர்க் பண்ணிக்கிட்டிருக் கறதையும் சூப்பர் மார்க்கெட்ல பதிவு பண்ண விரும்பறேன். சிதிலமடைஞ்ச கோயில்களைச் சரிபண்ண, ஒரு வேளை பூஜையாவது நடக்கச் செய்ய, உழவாரப் பணி முதல் தேவாரம் ஓதுதல் வரைக்கும் பலவிதமான காரியங்களுக்கு இந்த ஆர்கனைசேஷன் கைகொடுத்து வருது.

அப்பா! சுமி மாதிரி விளம்பரமில்லாம ஊருக்கு உழைக்க எத்தனை பேர் பாருங்க... அப்புறம் இந்த லிஸ்ட்ல லேட்டஸ்டா சேர்ந்திருக்கிறது அப்துல் கலாமும் அவரோட காலேஜ் ப்ரொஃபசர் அருட்தந்தை சின்னதுரையும். கலாம்ஜி குருஜியைப் பார்க்க திண்டுக்கல் பெங்கி காலேஜுக்குப் போயிருக்கார். குருஜியும் சரி கலாம்ஜியும் சரி, இது பிரைவேட் விஸிட், போட்டோ கிட்டோவெல்லாம் கிடையாதுன்னு பிரஸ்கிட்டே மறுத்துட்டாங்க. பாதுகாப்புக் காரணங்களுக்காக அருட்தந்தை அப்துல்கலாமைப் பார்க்க வரட்டும் என்று அதிகாரிகள் சொல்ல, 'நோ நோ, குருவைத் தேடி சிஷ்யன்தான் போகணும்'னு கலாம் போயிருக்கார்.

சூப்பர் மார்க்கெட் சுற்றமும் நட்பும் இந்த அடக்கத்தை ஃபாலோ பண்ணுவோம்; பட் வித் சம் எக்ஸெப்ஷன். இனிமே மன்ற உறுப்பினர்கள் தங்கள் மேட்டரோட போட்டோவும் அனுப்பினா (கையெழுத்துப் போட்டு), அதையும் என் படத்துக்குப் பக்கத்துல வெளியிட்டு கௌரவப்படுத்தறேன்பா!



சுமி



# கல்கி



2006 அக்டோபர் 8
விய புரட்டாசி 22
மலர் : 65
இதழ் : 10

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## போப் ஆண்டவரின் வழிகாட்டல்

இஸ்லாமிய உணர்வுகள் கொதித்துப்போகும் வகையில் பேசிய போப் பெனடிக்ட், அதற்காக மன்னிப்புக் கேட்டதுடன் நின்றுவிடவில்லை. 22 முஸ்லிம் நாடுகளின் தூதர்களை அழைத்துப் பேசியிருக்கிறார். இஸ்லாமியர்கள் மட்டுமின்றி, கிறிஸ்தவர்களும் வன்முறையை நிராகரித்து அமைதிப் பாதையைத் தழுவ வேண்டும் என்று வலியுறுத்தி அவர்களிடம் பேசியிருக்கிறார். "கிறிஸ்தவர்களும் இஸ்லாமியர்களும் இதற்காக இணைந்து பணியாற்ற முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். பிற மத துவேஷம் எவ்விதமாக வெளிப்பட்டாலும் அதை இணைந்து எதிர்க்க வேண்டும். வன்முறை எந்தத் தரப்பில் தலை தூக்கினாலும் அதனை இரு சாராரும் இணைந்து கண்டனம் செய்ய வேண்டும்..." என்று போப் பெனடிக்ட் பேசியதைப் பெரும்பாலான தூதுவர்கள் ஆமோதித்து ஏற்றுக் கொண்டுள்ளனர்.

இந்த நிகழ்வின் பயனாக உலகமே அமைதிப் பூங்காவாக மாறிவிடப் போகிறது என்று சொல்ல முடியாதுதான். எனினும், வேற்று மதத்தவர் சேர்ந்து சிந்திப்பதும் இணைந்து உழைப்பதும் சாத்தியம் என்பதை இச்சந்திப்பு உணர்த்தியிருக்கிறது. இந்தச் சந்திப்போடு நின்றுவிடாமல், பேசப்பட்டவை செயலாக்கம் பெற போப்பும் முஸ்லிம் நாட்டுப் பிரதிநிதிகளும் முயற்சிகள் மேற்கொண்டால் நிச்சயம் நல்விளைவுகளை எதிர்பார்க்கலாம்.

பல்வேறு மதங்களைச் சார்ந்தவர்கள் வாழும் இந்தியாவிலும் இதுபோன்ற பல மதத் தலைவர்களின் சந்திப்பும் ஆலோசனைக் கூட்டங்களும் நட்புச் சூழலை வளர்க்க உதவும். ஆனால், நடப்பது என்ன...?

அசோக் சிங்காலின் எண்பதாவது பிறந்தநாள் விழா,






மதமாற்றங்களைச் சாடவும் ஹிந்து ராஜ்ய ஸ்தாபிதத்துக்கு அறைகூவல் விடுக்கவும் அமைத்த மேடையாக மாறுகிறது.

காங்கிரஸ் ஆளும் மாநில முதலமைச்சர்களின் கூட்டுச் சந்திப்பில் "இஸ்லாமியர்களை அச்சுறுத்தாதீர்கள்" என்று பேசுகிறார் சோனியா காந்தி! இதன் மூலம் இல்லாத ஒரு பீதியைக் கிளப்புகிறார். "இஸ்லாமிய பயங்கரவாதத்தை ஒடுக்கும் முயற்சியில், பயங்கரவாதிகள் அல்லாத முஸ்லிம்களைக் கொடுமைக்குள்ளாக்கிவிடக் கூடாது" என்று மன்மோகன் சிங்கும் சோனியாவை வழிமொழிந்திருக்கிறார்.

இதன் விளைவாக, ஹிந்து - முஸ்லிம் இரு தரப்பினரிடமும் அனாவசியமாக பரஸ்பரம் சந்தேகமும் அச்சமும் வளரும்.

பயங்கரவாதத் தடுப்பு என்ற போர்வையில் தாங்கள் தாக்கி, ஒடுக்கப்படுவோம் என்னும் அச்சம் முஸ்லிம்களுக்கும், 'அனைத்து முஸ்லிம்களுமே சந்தேகத்துக்குரியவர்கள் தானோ?' என்கிற சந்தேகம் ஹிந்துக்களுக்கும் முளைவிடத்தான் சோனியாவின் அறிக்கையும் பிரதமரின் அறிவுரையும் காரணங்களாக அமையும்.

அரசியல் தலைவர்கள், மதத்தை அரசியலாக்குவதை அடியோடு நிறுத்த வேண்டும்; சிறுபான்மையினரின் வாக்குகளைப் பெறுவதற்காகவே பொறுப்பின்றிப் பேசும் பழக்கத்தைக் கைவிட வேண்டும்.

மதத் தலைவர்கள், தாங்கள் சார்ந்துள்ள மதங்களைப் பற்றி மட்டும் கவலைப்பட்டால் போதாது; தேசத்தின் பல மத மேன்மையைக் கட்டிக் காக்கப் பிற மதங்களுடன் இணக்கமாக வேண்டும், அனைத்து மதங்களும் வெவ்வேறு பாதைகளில் சென்றாலும் அவை அன்பை நோக்கியே செல்கின்றன என்பதை அறிவுபூர்வமாகவும் ஆராய்ச்சிபூர்வமாகவும் எடுத்துச் சொல்ல வேண்டும். இதற்கென சன்மார்க்க மேடை நிகழ்ச்சிகள் அமைத்துப் பாடுபட வேண்டும்.

இவை போன்ற முயற்சிகள் மட்டுமே தேசத்தின் ஒருங்கிணைப்பைக் காக்கும்; பல்வேறு மதங்களின் தனித்தன்மையையும் சிறப்பையும் நிலைபெறச் செய்யும்.

இவற்றைச் செயல்படுத்துவதற்கான தகுதியும் வசதியும் படைத்த மடாலயங்களும் மத அமைப்புகளும் இன்று உள்ளன. திறம் படைத்த மதத் தலைவர்களும் இருக்கிறார்கள். இவர்களை இந்த நோக்கில் செயல்படுமாறு ஊக்குவிப்பதுதான் ஒரு மதச்சார்பற்ற அரசின் கடமை. ○

மழைக்காலம் தொடங்கிவிட்டது. நம்மில் பலர் இலேசான தூறலில் நனைந்தாலே போதும், மறுநாளே தும்ம ஆரம்பித்து விடுவார்கள். இன்னும் சிலர் இருக்கிறார்கள்... அடாது மழையில் விடாது நனைந்தாலும் சின்ன காய்ச்சலோ, ஜலதோஷமோ இவர்களைத் தாக்காது. இந்த வேறுபாடுகளுக்கெல்லாம் முக்கிய காரணம் நோய் எதிர்ப்பு சக்திதான். இது நமது உடல் ஆரோக்கியத்தைப் பேணுவதோடு, சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சையிலும் (Kidney Transplantation) முக்கிய பங்கு வகிக்கிறது. இது குறித்து நம்மிடம் விளக்குகிறார், சென்னை, செயின்ட் தாமஸ் மருத்துவமனையின் சிறுநீரகவியல் துறை தலைமை மருத்துவரான பழனி. ரவிச்சந்திரன் அவர்கள்.

"நமது உடலை ஒரு பெரிய தொழிற்சாலைக்கு ஒப்பிடலாம். தொழிற்சாலையின் அனைத்துப் பணிகளும் ஒழுங்காக நடக்க, அங்கேயுள்ள சுத்திகரிப்பு நிலையங்கள் மிக முக்கியம்.

குறிப்பாக, சிறுநீரகம் மற்றும் நுரையீரல். இதில் சிறுநீரகமானது இரத்தத்தில் உள்ள நச்சுக்களை வெளியேற்றி, சுத்தப்படுத்தி, இரத்தத்தைச் சீராக வைத்திருக்கிறது. இந்த இயக்கத்தில் சிறிய பாதிப்பு ஏற்பட்டாலும் கூட நமது உயிருக்கே ஆபத்து ஏற்பட்டுவிடும்.

முன்பெல்லாம் சிறுநீரகச் செயலிழப்பால் பாதிப்படைவோரின் எண்ணிக்கை குறைந்த அளவிலேயே இருந்தது. ஆனால் இன்றைக்குப் பல மடங்கு அதிகமாகிவிட்டது. வாகனங்களின் அதிகரிப்பால் ஏற்படும் சுற்றுச்சூழல் மாசுபாடு, அமிலம் கலந்த குளிர்பானங்களைப் பருகுவது, பூச்சிக்கொல்லி மருந்துகள் அதிகமாகப் பயன்படுத்தப்பட்ட தானியங்களையும், காய்கறிகளையும் உட்கொள்வது போன்றவைதான் காரணங்கள்.

சில ஆண்டுகளுக்கு முன்புவரை சிறுநீரகத்தைத் தானமாகப் பெற்று, அறுவை சிகிச்சை மூலம் பொருத்திக்கொண்ட ஒருவருக்கு, சுமார் ஐந்தாண்டுகள் வரைதான் அந்தச் சிறுநீரகம் பயனளித்தது. பின்னர் நோயாளி சிறுநீரகத்தைத் தானமாகப் பெற மற்றொருவரைத் தேட வேண்டி இருந்தது. இது மிகவும் சிரமமான காரியம்.

'Lymphocyte' எனும் எதிர் உயிரி செல்லால்தான் இதெல்லாம். நமது உடலில் மற்ற நபர்களின் செல்லோ அல்லது வேறு ஏதாவது உடலுக்கு ஒவ்வாத செல்லோ இருந்தால் அவற்றைத் தாக்கி அழிப்பதுதான் இந்த 'Lymphocyte'ன் பணி.

சிறுநீரகம் தானமாகப் பெற்று அறுவை சிகிச்சை செய்துகொண்டவரின் உடலில் உள்ள இந்த 'Lymphocyte' செல்கள், தானமாகப் பெற்ற சிறுநீரகத்தின் செல்களை



• சிறுநீரக நோயாளியுடன் டாக்டர் பழனி. ரவிச்சந்திரன்

# சிறுநீரக மாற்று அறுவையில் புதிய திருப்பம்!

அழிக்கவோ அல்லது செயல்பட விடாமல் தடுக்கவோ முற்படுகின்றன. இதனால் நோயாளிக்கு ஐந்தாண்டுகளுக்குப் பிறகு மீண்டும் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விடுகிறது.

இந்த நிலையை மாற்ற வேண்டும்... ஒருமுறை சிறுநீரகத்தைத் தானமாகப் பெற்று அறுவை சிகிச்சை செய்து கொண்டவர், மீண்டும் தானமாக சிறுநீரக அறுவை சிகிச்சை செய்து கொள்ளக் கூடாது... என்ன செய்யலாம் என்று யோசித்தோம்.

இந்த 'Lymphocyte' செல்களை எதிர்த்துப் போராடும் 'Regulatory Lymphocyte' செல்லை உடலில் அதிகரிக்க முடிவு செய்தோம். இந்த 'Regulatory Lymphocyte' செல்கள், நமது உடலில் 20 சதவிகிதமாக உள்ளன. இதை 75 சதவிகிதமாக அதிகரிப்பதன் மூலமாகவும், அதே சமயத்தில் உடலில் 75 சதவிகிதமாக உள்ள 'Lymphocyte' செல்களை 25 சதவிகிதமாகக் குறைப்பதன் மூலமும் தானமாகப் பெறப்பட்ட சிறுநீரகத்தின் ஆயுளைப் பல ஆண்டுகள் அதிகரிக்க முடியும் எனக் கண்டறிந்தோம்.

இதன்படி நோயாளி சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்துகொள்வதற்கு முன்பாக ஏழு வகையான நோய் எதிர்ப்புத் தடுப்பூசிகள் போடப்படுகின்றன. இந்தத் தடுப்பூசிகள் 'Regulatory Lymphocyte' செல்களை அதிகரித்தும், 'Lymphocyte' செல்களைக் கட்டுப்படுத்தியும் வைக்கின்றன. மேலும் இந்த முறையில் சிறுநீரகம் தானமாகத் தரும் நபரின் உடலில் உள்ள 'ஸ்டெம் செல்கள்' எனும் சக்தி வாய்ந்த செல்களும் நோயாளிக்கு நோய் எதிர்ப்புச் செல்களாகச் செலுத்தப்படுகின்றன.

இவ்வாறு சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்துகொள்பவர்கள், வாழ்நாள் முழுவதும் மீண்டும் சிறுநீரக அறுவை சிகிச்சை செய்து கொள்ள வேண்டியதில்லை. ஒருமுறை தானமாகப் பெற்ற சிறுநீரகத்துடன் பல ஆண்டுகள் ஆரோக்கியத்துடன் உயிர் வாழலாம்.

இந்த அறுவை சிகிச்சைக்குப் பின்பு, அதிகமான செலவில் மருந்து, மாத்திரைகளை உட்கொள்ள வேண்டியதில்லை. மிகக் குறைந்த அளவில், குறைந்த செலவில் அவற்றை உட்கொண்டாலே போதுமானது. நோய் எதிர்ப்பு சக்தி மூலம், சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்துகொள்ளும் இந்த மருத்துவ முறை, நமது அரசு மருத்துவ மனைகளிலும் அறிமுகமானால், இந்த நோயால் பாதிப்படைந்த ஏழை, எளிய நோயாளிகளுக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும்" என்று கூறும் டாக்டர் பழனி. ரவிச்சந்திரன், தமது கண்டுபிடிப்பு குறித்து அமெரிக்கா, சுவிட்சர்லாந்து, ஜெர்மனி, இங்கிலாந்து போன்ற நாடுகளில் நடைபெற்ற பல்வேறு மருத்துவக் கருத்தரங்குகளில் பேசியிருக்கிறார். இது தொடர்பான அவரது கட்டுரை 'Journal of Immuno Pharmacology' எனும் அமெரிக்க மருத்துவ இதழில் டிசம்பர் மாதம் வெளியாக உள்ளது.

- ராகவ்குமார்

படம்: பொள்ளாச்சி சுந்தரம்

# வாழ வைக்கும் வாழை!

• பொன்னுராமன்



தமிழ்நாட்டில் இயற்கை விவசாய அடிப்படையில், வாழை பயிரிடுபவர்கள் மிக மிகக் குறைவு. அவர்களில் ஒருவர் தஞ்சை, திருக்காட்டுப்பள்ளி பவனமங்கலம் கிராம விவசாயி பொன்னுராமன். அதுவும் வாழை சாகுபடியில், அடர் நடவு விவசாயி இவர். அது என்ன அடர் நடவு?

சாதாரணமாக ஒரு வாழைக்கும், இன்னொரு வாழைக்கும் இடையே எட்டடி இடைவெளி விட்டு நடவு செய்வார்கள். இதில் ஓர் ஏக்கரில் தொள்ளாயிரம் கன்றுகள் நடலாம். அடர் நடவு சாகுபடியில், ஒரு கன்றுக்கு அடுத்து ஒன்றரை அடிவிட்டு இன்னொரு கன்று நட்டு, அதற்கும் எட்டடி தூரத்தில் இன்னொரு கன்று நடப்படுகிறது. இந்த முறையில் ஓர் ஏக்கரில் ஆயிரத்து ஐந்நூறு வாழைக் கன்றுகள் நடவு செய்யப்படுகின்றன.

பொன்னுராமன் குடும்பத்தின் பூர்வீகத் தொழிலே விவசாயம்தான். வீட்டுக்குப் பின்புறம் வயல். ஐந்து ஏக்கரில் நெல். இரண்டு ஏக்கரில் வாழை. இரண்டு ஏக்கரில் தென்னை. 'வசந்தம் இயற்கை வழி பண்ணையம்' என்று இவரது வேளாண் பண்ணைக்குப் பெயர் சூட்டியவர் இயற்கை வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வார். மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை வயலை மாற்றி மாற்றி, இரண்டு ஏக்கரில் மட்டும் வாழையெனக் கடந்த பத்தாண்டுகளாக வாழையைப் பயிரிட்டு வருகிறார்.

"வலுத்தவன் வாழை போடணும்; இளைத்தவன் எள்ளு போடணும் என்பார்கள். பொருளாதாரத்தில் வலுவாய் உள்ளவர்கள் வாழையைப் பயிரிட்டால்தான், ஏதேனும் இயற்கைச் சீற்றங்களின்போது ஏற்படும் பெருமளவு நஷ்டத்தினைத் தாங்கிக் கொள்ள முடியுமாம். வருடா வருடமா இயற்கைச் சீற்றம் வந்துகொண்டேயிருக்கிறது? இல்லையே! பொதுவாகவே வாழை மிகுந்த லாபம் தரக்கூடிய சாகுபடி ஆகும். ஓர் ஏக்கர் வாழை சாகுபடியிலிருந்து கிடைக்கக் கூடிய லாபத்துக்கு, நாலு ஏக்கரில் நாம் நெல் சாகுபடி செய்ய வேண்டும். விவசாயிகளின் குடும்பப் பொருளாதாரத்தை பணச் செழிப்புடன் உயர வைத்து, அவர்களை வாழ்வாங்கு வாழ வைக்கக் கூடியது வாழை!" என்கிறார் பொன்னுராமன்.

வாழை, நெல் மற்றும் தென்னை என

எல்லாவிதமான சாகுபடிப் பயிர்களுக்கும் இங்கு இயற்கை உரம் மட்டுமே உபயோகப்படுத்தப்படுகிறது. மண்புழு உரம் பண்ணையத்திலேயே தயாரிக்கப்படுகிறது. கடலைப் பிண்ணாக்கு ஊறவைக்கப்பட்டு, மண் புழு உரத்துடன் கலந்து பயிர்களுக்கு வைக்கப்படுகிறது. பஞ்சகவ்யம் தெளிக்கப்படுகிறது. குணபம் என்கிற ரசாயன உரமான, யூரியாவுக்குச் சமமான கரைசல், பயிர்களின் வேர்களில் ஊற்றப்படுகிறது.

சென்னையில் இயங்கி வரும் இயற்கை விவசாய விளைபொருள் அங்காடிகளுக்கு, பவனமங்கலத்திலிருந்து நேரடியாகவே வாழை விளைபொருட்களை அனுப்பி வைத்து வருகிறார் பொன்னுராமன். மிகவும் கெட்டிக்காரத்தனமாக சாகுபடி செய்தால் மட்டுமே, ஓர் ஏக்கரில் இருபோக நெல் விளைச்சலில் வருடத்துக்கு சுமார் பத்தாயிரம் ரூபாய் லாபம் பார்க்கலாம். ஆனால் தற்போது பொன்னுராமன், ஓர் ஏக்கர் வாழை சாகுபடியில் ஆண்டு ஒன்றுக்குச் நாற்பதாயிரம் ரூபாய் லாபம் ஈட்டி வருகிறார். இது நெல் விளைச்சலின் லாபத்தைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகம்!

- ஸ்ரீரங்கம்
திருநாவுக்கரசு

# சிவப்பு மனமும்

நமக்கு விருப்பமான ஒருவர், அவருக்கு விருப்பமான ஒருவரைப் பற்றி வியந்து பேசும்போது அறிமுகமே இல்லையாயினும் அந்த நபர் மீது அன்பு கூடி விடுகிறது. இன்னாரால் புகழப்பட்ட இவர் என்பதால் கூடிய அன்பு, வாழ்வின் எந்தச் சந்தர்ப்பத்திலும் வழுவாமல் நம்மிடமே தங்கியும் விடுகிறது.

எழுத்தாளர் தஞ்சை பிரகாஷ் கூறிய பல விஷயங்கள், கவிதையின் தொடக்கப் புள்ளியில் இருந்த எனக்கு மிரட்சியை ஏற்படுத்தியிருக்கின்றன. பிரகாஷ், எளிதாக யாரையும் வியந்து கூறுபவரல்லர். அவருக்கென்று தனியான இலக்கிய அபிப்ராயங்கள் இருந்தன. சகல துறைகளிலும் தாம் அறிந்தவற்றை எளிமையாக வெளிப்படுத்துவதில் கெட்டிக்காரர்.



அவரைச் சந்திக்க வருகிற ஒவ்வொருவருக்கும் அவர் பேச்சு, புதிய செய்திகளுக்கு நுழைவாயிலாக அமையும்; அதன் சுவாரஸ்யமும் சொல் முறையும் யாரையும் ஈர்த்துவிடும். அப்படியான பிரகாஷ், நான் முழுக்க வியந்த ஒருவர் கம்பதாசன்.

"அவரைப் போல வரவே வராது. என்ன அழகு தெரியுமா? என்ன குரல் தெரியுமா? கவிஞர்களிலேயே மிடுக்கும் ஆற்றலும் ஒருங்கே அமைந்த கவி கம்பதாசன்தான்" என்பார். "இந்திப் படத் தயாரிப்பாளர்களால் கொண்டாடப்பட்டவர். இந்தி மெட்டுகளுக்குத் தமிழ் வார்த்தைகளை அவ்வளவு இலாகவமாகப் பயன்படுத்த அவரைப்போல இன்னொருவரால் முடியாது. ஒரு காலத்தில் தமிழ்த்திரை உலகமே அவர் பாடலுக்காகக் காத்துக் கிடந்தது'' என்றெல்லாம் பிரகாஷ் வியந்ததை இப்போது நினைத்தாலும் சிலிர்க்கிறது.

நாடக நடிகராக, பாடகராக, ஆர்மோனிஸ்ட்டாக அறியப்பட்ட கம்பதாசன், திரைப்பட நடிகராகவும் இருந்திருக்கிறார். அத்தனை ஒப்பனைகளையும் தாண்டி அவருடைய சுயமுகம் கவிஞரென்பதே. 1940-ல் வெளிவந்த 'வாமன அவதாரம்' தொடங்கி, 1961-ல் வெளிவந்த 'அக்பர்' திரைப்படம் வரை திரைப்பாடல் துறையில் சாதித்த கம்பதாசன், இந்தியிலும் ஆங்கிலத்திலும் அதிகப் பாண்டித்தியம் உடையவர்.

'கனவு கண்ட காதல்
கதை கண்ணீராச்சே
நிலா வீசும் வானில்
மழைச் சூழலாச்சே
மழைச் சூழலாச்சே'

- இசைச் சக்ரவர்த்தியான நௌஷாத்தால் இசையமைக்கப்பட்ட இப்பாடலை 'அக்பர்' திரைப்படத்துக்காக பி.சுசீலா பாடினார். பாடப்பட்ட நொடியில் இருந்து இந்த நொடிவரை கேட்கும் யாரையும் ஈர்த்துவிடும் அப்பாடலின் உண்மையை என்னவென்பது?

சோக ரசம் ததும்பும் அப்பாடலை இயற்றிய கம்பதாசன், தம்மையொரு சோஷலிஸ்ட்டாகப் பிரகடனப்படுத்திக் கொண்டவர். ஒருபக்கம் காங்கிரஸ் பேரியக்கம், இன்னொரு பக்கம் வேகமாக வளர்ந்துகொண்டிருந்த திராவிட இயக்கம்... இரண்டுக்குமிடையிலும் தம் பாதையாக அவர் தேர்ந்தெடுத்தது பொதுவுடைமையை! எனவேதான்,

'சூரியனும் ஒரு தொழிலாளி
தினம்
சுற்றும் உலகும் தொழிலாளி
வாரி அலையும் தொழிலாளி
எதிர்
வந்திடும் காற்றும் தொழிலாளி'

என்று 1956-ல் வெளிவந்த 'நன்னம்பிக்கை' படத்தில் அவரால் எழுத முடிந்தது. கொஞ்சத்திலும் கொஞ்சமேனும் சமூக விஷயங்களோடு தொடர்பு இல்லாத ஒருவர் நிலைபெறுவதல்ல, இயங்குவதே சிரமம் என்பதைப் படைப்பாளிகள் உணருவர். படைப்பென்பது சாதாரண, மிகச்

# சித்தாந்த தெளிவும்...

யுகபாரதி

சாதாரண வாழ்வின் நெருடலான தரு ணங்களில் முகிழ்ப்பவை. எழுதுகோலும் தாளும் மாத்திரமே எழுத்துக்குப் போதுமென்று நினைப்பவர்கள், நெருட லான தருணத்தில் முகிழ்ப்பவை என் னும் குறிப்பை மறுக்கலாம். ஆனால் கம்பதாசனது படைப்புகளின் ஊடாகப் பயணித்தால், அந்த அற்புதத்தை அறியலாம். 1952-ல் வெளிவந்த 'பிரியசகி' படத்தில் 'கடவுளே காலம் மாறியதே'

நாமகூட 'பிரியசகி'ன்னு ஒரு படம் நடிச்சோம்... அதைப் பத்தி யாராவது எழுதுவாங்களா?



என்னும் பாட்டில்,

'விந்தை மாளிகை
அமைத்தவன் தனக்குக்
குந்தக் குடிசையில்லை
நாட்டிலே
இந்தக் கொடுமையை
மாற்றிப் புதுவிதி
எழுதாயோ பொன்
ஏட்டிலே' - என்று எழுதியிருப்பார்.

மண் குடிசை வாசலும், மாறாத வறுமையும் தொலையாதது போல, தொடர்ந்து வரும் நிழல் போல இருப்பதை இதைவிட பொறுப்பாகச் சிந்திக்க சிவப்பு மனம் வேண்டும்; சித்தாந்த தெளிவு வேண்டும். சொந்த வாழ்க்கைச் சோகங்களும் துரோகங்களும் கம்பதாசனை அலைக்கழித்திருக்கின்றன. அரசனைப் போல் வாழ்ந்து, கடைசி காலத்தில் அரிசிக்கே வழியில்லாமல் மாதா மாதம் அரசு கொடுத்த நூறு ரூபாய் உதவித் தொகையை நம்பி இருந்தாரென்று கம்பதாசன் கவிதைகளைக் தொகுத் தளித்த சிலோன் விஜயேந்திரன் எழுதியிருப்பது நெஞ்சை அறுக்கிறது.

தம்மையொரு மாபெரும் கவியாக வரித்துக் கொண்ட யாரையுமே இச் சமூகம் கண்டுகொண்டதில்லை. கண்டுகொள்வது மட்டுமல்ல, புறந்தள்ளி அவர்களுடைய படைப்புகளை இருட்டடிப்பும் செய்து விடுகிறது. சிலோன் விஜயேந்திரன் மாதிரி ஓரிருவர், படைப்பாளி மீதுள்ள அன்பினாலும் அவர்கள் படைப்பின் மீதுள்ள ஈர்ப்பினாலும் சேகரித்தவற்றைத் தவிர, வேறு பதிவுகளே இல்லாத நிலை.

'கண்ணினைப் பாதிட
தூக்கமுண்டு - அற்பக்
கழுதையினைப் பாதிட
துறையுமுண்டு
பண்ணினைப் பாதிட
தாளமுண்டு - எங்கள்
பசியினைப் பாதிட
உண்டோ இடம்?'

- அப்பாவு என்ற இயற்பெயரை கம்பதாசனாக மாற்றிக்கொண்ட திண்டிவனத்துக்காரர் திரைப்படக் கவிஞராகச் செய்த அளப்பரிய காரியம் என்னவெனில், அதுவரை வெளிவந்த பழைய பாடல் முறைகளைப் பின்பற்றாமல், மறுமலர்ச்சித் தமிழைப் புது அழகுடன் பாடல்களில் புகுத்தியது. 'தொழிலாளி', 'பாட்டு முடியுமுன்னே', 'கம்பதாசன் கவிதைகள்', 'புதிய பாதை', 'மொழி முத்தம்' ஆகியன இவருடைய கவிதைத் தொகுப்புகள். நாடகாசிரியராக, சிறுகதை எழுத்தாளராக உரைநடைத் தமிழிலும் நிரூபித்தவர் கம்பதாசன். வங்கத்துப் பெருங்கவி ஹரீந்தரநாத் சட்டோபாத்யாயா கூறியதைப் போல, காவிய தெய்வத்தின் அபூர்வ வார்ப்படத்திலே பழைய ரத்தம் பாய்ந்தாலும் சிறந்து ஒலிக்கும் புதுக் குரலின் தொனிப்பே கம்பதாசனின் படைப்புகள்.

பாரதி மீது பற்றும் பாரதிதாசனோடு நட்பும் கொண்டிருந்த கம்பதாசன், க.நா.சு.வுடனும் இலக்கிய உறவு பூண்டிருந்தார்.

'வட்ட நிலா புவி
வீழ்ந்ததுவோ -
ஷாஜஹான்
வடித்த கண்ணீரின்
முதல் துளியோ' - என்று

தாஜ்மஹாலை எழுதிய வரிகளை மேற்கோள் காட்டாமல், கம்பதாசனின் சிறப்பை விவரிக்க இயலாது. விரக்தியையும் வேதனையையும் இறுதிக் காலத்தில் சுமந்த கம்பதாசனின் மறைவுக்கு மூவரே வந்ததாகவும், தோள் கொடுத்து சுமந்து போக நாலுபேர்கூட இல்லை என்பதாகவும் எழுதப்பட்ட வரிகளை வாசிக்கையில், அதீத புனைவு போலத் தோன்றினாலும், தமிழ்ச் சமூகத்

• கம்பதாசன்



" அரசு கொடுத்த நூறு ரூபாயை நம்பி இருந்தார்!"

தில் அதற்கான சாத்தியங்கள் உண்டு என்றுதான் படுகிறது. லௌகீகத் தேவைகளுக்கு எழுத்தை நம்பிய படைப்பாளி ஒவ்வொருவரும் சந்திக்கும் துயரம் இது. 'போகின்றதே அந்தோ ஆசைப் புறாவே' என்னும் 'பிரியசகி' பாடலிலுள்ள,

'தங்கி இளைப்பாறக்
கூடுமின்றி
தாப வெங் காற்றினில்
மேனிகுன்றி
கங்குலின் வலைவீசும்
காலவேடன்
முன்னே' - என்ற

வரிகள் சூழலுக்கு எழுதப்பட்டதாக நினைக்க முடியவில்லை. சூட்சுமம் நிரம்பிய வாழ்வை, மரணத்தின் கைகள் தமது கூரிய நகத்தால் குத்திக் கிழிக்கும் குரோதமாகவே எண்ணத் தோன்றுகிறது.

'காதலின் கூத்தையெல்லாம்
உன் கவிதையில் கண்டேனய்யா'

எனக் கவிமணி, கம்பதாசனை வியந்தாலும் அதைவிட காலத்தின் கூத்துகளை அவர் வாழ்க்கைச் சரிதம் நமக்குக் காட்டுகிறது. 1950-ல் 'சந்திரிகா' திரைப்படத்தில் கம்பதாசன் எழுதியது போல...

'நினைத்திடில் உலகமே
நிழல் பொம்மலாட்டமே
நிஜம் என்பதெல்லாம்
நிராசை தானாகுமே.'

தத்துவார்த்தப் புரிதலுடன் அன்றாட நிகழ்வுகளை அலசிப் பார்க்கும் ஒருவரால், எதார்த்த வாழ்வியலோடு இணைங்கிப் போக முடியாத சங்கடம் சற்றே விரோதமானது. 'அகம்' மூண்ட தீ தன்னைக் அணைக்காது தண்ணீர்' என 'வானரதம்' படத்தில் வரும் பாடலை இதற்குப் பொருத்திப் பார்க்கலாம். பொதுவுடைமைக் கவிஞராகத் தம்மை நிறுவிய கம்பதாசன், ஸ்ரீனிவாசராவ் சிந்தே இசையில் வெளி வந்த 'ஆராய்ச்சி மணி (1942)' படப் பாடலான

'ஆவதும் அழிவதும்
அவன் செயல் என்றே
ஆறுதல் அடை நெஞ்சே' - என்ற வரி

களில் மேற்கூறிய செய்திகளுக்குத் தம்மைத் தாமே காட்சிப்படுத்துகிறார். ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்றான 'வளையாபதி'யில் ஓர் இடம்...

'உற்ற உதிரம் ஒழிப்பான்
கலிங்கத்தை
மற்றது தோய்த்துக்
கழுவுதல் என் ஒக்கும்
பற்றினால் ஆகிய
பாவத்தை மீட்டும்
பற்றொடு நின்று
பறைக்குமாறு'

- பற்றால் வரும் பாவம் நீங்கப் பற்றை விடுதலே வழி. பற்றினால் வரும் பாவத்தைத் தொடர்ந்து செய்வது உதிரத்தை உதிரத்தால் கழுவுவது போல என்று அற்புதமாய்ப் போகும். எழுத்தினால் வந்த துயரத்தை எழுதியே நீக்க வேண்டுமென எண்ணிய கம்பதாசன் இறுதிவரை எழுதிக் கொண்டேயிருந்தார். நோய், வறுமை, காதல் தோல்வி யாவற்றையும் தாண்டி எழுத்தே அவருக்கு அனைத்துமாக இருந்திருக்கிறது. கம்பதாசனை உணர்ந்துகொள்ள கம்பதாசனைப் போன்ற மிடுக்கும் ஆற்றலும் தேவை. பாட்டு முடிந்த பிறகு அவர் வீணை மீட்டிக் கொண்டு இருக்கிறது இதயத்தை.

(வீகம்)



# வீடு வாங்கலாம் வாங்க!

## 1.10.2006 முதல் 7.10.2006 வரை

**மேஷம்:** பொருளாதாரம் மேலோங்கும். கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். திருமணக் காரியம் கைகூடும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். புதிய தொழில் முயற்சி கைகொடுக்கும். குழந்தைகள் வழியில் மன சந்தோஷம் ஏற்படும். உறவினர்கள் விலகுவர். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். வீடு, மனை வாங்க உகந்த நேரம். கல்வி வளம் மேலோங்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**ரிஷபம்:** சந்தோஷமான வாரம். மனக்குழப்பங்கள் தீரும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். உடல்நிலை நன்றாக இருக்கும். பணப் பற்றாக்குறை வராது. உத்தியோகத்தில் மேன்மை உண்டாகும். பிள்ளைகளால் நற்பலன் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும்.

**மிதுனம்:** நல்ல யோகமான வாரம். தெய்பலம், ஆத்ம பலம் மிகுந்து காணப்படும். தனம், குடும்பம், கல்வி மேலோங்கும். மகப்பேறு பாக்கியம் ஏற்படும். பணக் கஷ்டம் இராது. புதிய தொழில் முயற்சி நற்பலனை அளிக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். எதிர்ப்பு, தொல்லை இருக்காது. வேலையில் நற்பெயர் கிட்டும். வீடு வாங்க நல்ல தருணம். ஆடை, ஆபரணப் பொருட்கள் சேரும். பரிகாரம் தேவை இராது.

**கடகம்:** சோதனைக்குப் பின் சாதனை படைக்கும் வாரம். மனத்தில் தைரியம், தன்னம்பிக்கை ஏற்படும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. வாகனத்தில் கவனமாகச் செல்லவும். திருமணக் காரியம் கைகூடும். கல்வியில் அக்கறை செலுத்தவும். நெருங்கிய நண்பர்கள் விலகிப் போவார்கள். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. உடல்நிலை நன்றாக இருக்கும். வழக்கு முடிவுக்கு வரும். குழந்தைகளைப் பற்றிய மனக்கவலை தீரும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**சிம்மம்:** மனத்தில் புத்துணர்ச்சி ஏற்படும் வாரம். புதிய தொழில் திட்டங்கள் பயனளிக்கும். சுபகாரியப் பேச்சுவார்த்தை துவங்

கும். வராத பணம் வந்து சேரும். உடல்நிலை நன்றாக இருக்கும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி கிட்டும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். வீடு மாற்றம் ஏற்படும். தடைபட்ட காரியம் கைகூடி வரும். வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். ராகு/கேது/ சனி/ குரு வழிபாடு செய்துவர, நற்பலனைத் தரும்.

**கன்னி:** உற்சாகமான வாரம். மனக்குழப்பம் போகும். முயற்சி செய்யும் காரியத்தில் வெற்றி அளிக்கும். திருமணம் கைகூடும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். புதிய ஆபாரணங்கள், பொருட்கள் சேரும். புதிய தொழில் கைகூடும். உடல்நிலை நன்றாக இருக்கும். லெட்சுமி கடாக்ஷம் பெருகும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து அணுகும். பரிகாரம் தேவை இல்லை.

**துலாம்:** வியாபாரத்தில் கணிசமான லாபத்தை அடையும் வாரம். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பொருளாதாரக் கஷ்டங்கள் விலகும். கல்வி நிலை மேலோங்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சுபகாரியம் நடக்கும். வெளிநாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப்:பிரிவினை ஆகும். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல வாய்ப்பு இருக்கும். வீடு, மனை வழியில் ஆதாயம் இருக்கும். உத்தியோகத்தில் முன்னேற்றம் உண்டு. ராகு/கேது/குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**விருச்சிகம்:** ஆடை, ஆபரணப் பொருட்கள் சேரும் வாரம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வராத பணம் வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும். வீடு வாசல் வாங்க நல்ல தருணம். புதிய தொழில் முயற்சி பலனளிக்கும். வெளிதேசம் செல்லும் வாய்ப்பு இருக்கும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். ராகு/ கேது/குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**தனுசு:** மன சந்தோஷமான வாரம். வாரத்தின் துவக்கமே நற்பலனை அளிக்கும். சுபகாரியம் நடக்கும். பணக்கஷ்டம் இராது. புண்ணியஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து அணுகும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். சொத்துகள் வாங்கும் வாய்ப்பு, தொலைதூர பிரயாண வாய்ப்பு வந்து சேரும். உத்தியோகத்தில் உயர்வு கிடைக்கும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். ஆஞ்சநேயர் வழிபாடு



**தஞ்சை பரத்வாஜ்**

# பரத்வாஜ் பதில்கள்


* படம் : ஸ்ரீஹரி

**என் மகனுக்குத் திருமணமாகி ஒரு வருடத்தில் விவாகரத்து ஆகிவிட்டது. அவனுக்கு மறுமணம் எப்போது நடைபெறும்?**

**- சுதா, மும்பை**

உங்கள் பையனுக்கு குருதசை, புதன் புத்தி நடக்கிறது. 1.11.2006க்குப் பிறகு திருமணம் கைகூடும். பிறந்த ஊருக்குத் தென்திசையில் பிறந்த, உடன்பிறப்புகள் இருவரைக் கொண்ட பெண் அமைவாள்.

**கடந்த 1998-ல் திருமணம் ஆன என் தங்கைக்கு இதுவரை குழந்தை பாக்கியம் இல்லை. இனி வாய்ப் புள்ளதா?**

**- பி. மீனாட்சி, மதுரை**

உங்கள் தங்கை கணவரின் ஜாதகப்படி திருமணம் ஆகி 9 வருடங்கள் கழித்துக் குழந்தை பிறக்க வாய்ப்பு உள்ளது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். 1.11.2006க்குப் பிறகு, ஜாதகரிடம் நல்ல மாற்றங்கள் ஏற்படும்.

உங்கள் தங்கையின் ஜாதகப்படி 22.06.2007-க்குப் பிறகு கருத்தரிக்கும் பாக்கியம் உள்ளது. சனிதசை, சுக்ர புத்தியில் ஆண் மகவு பிறக்கும்.

**என் மகனுக்கு வேலை எப்போது நிரந்தரமாகும்? எப்போது திருமணம் ஆகும்?**

**-கே.வி. லக்ஷ்மிநாராயணன், சென்னை - 116.**

உங்கள் மகனுக்கு ஜாதகப்படி 34 வயதில் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்குப் பத்து மைல் தொலைவில் பிறந்த பெண் அமைவாள். தற்பொழுது சூரிய தசை. அது முடிவுற்று, சந்திர தசையில் நிரந்தர வேலை கிட்டும்.

நல்லது.

**மகரம்:** மன உளைச்சல் நீங்கும் வாரம். தந்தையர் உடல்நிலை சற்று பாதிக்கும். வாகனத்தில் கவனமாகச் செல்லவும். உடல் நிலையில் கவனம் தேவை. ஜாமீன் போடக்கூடாது. குடும்ப உறவில் விட்டுக் கொடுக்கவும். சுபசெலவு ஏற்படும். திருமணம் கைகூடும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள். பணக் கஷ்டம் விலகும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். வாக்குவாதம் தவிர்க்கவும். வழக்கு இழுபறி ஆகும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். வியாபாரத்தில் சற்று மந்தநிலை இருக்கும். ராகு/கேது/சனி/ குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்:** சுப காரியம் கைகூடும். பணக் கஷ்டம் விலகும். உடல்நிலையில் கவனம் செலுத்தவும். வேலைப் பளு சற்றுக் குறைய ஆரம்பிக்கும். வெளிநாட்டு அழைப்பு ஏற்படும். பெரிய மனிதர்கள் ஆதரவு கிட்டும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். ஆடை, அலங்காரப் பொருட்கள் சேரும். கணவன், மனைவி விட்டுக் கொடுக்கவும். வேலையில் நற்பெயர் கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். ராகு/கேது வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

**மீனம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். முடிவு பெறாத காரியங்கள் முடிவு பெறும். வீடு/வாகனம் வாங்க நல்ல தருணம். வெளிநாட்டு மனிதர்களால் ஆதாயம் ஏற்படும். வேலையில் புதிய பதவி கிடைக்கும். திருமணம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். செலவுகள் அதிகமாக இருக்கும். வெளிநாடு செல்லும் பாக்கியம் உண்டாகும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். குரு/சனி வழிபாடு நற்பலன் அளிக்கும்.

"விழாக்காலம் எல்லாமே
ராஜ்மஹால் பட்டோடு..."




- விழாக்கால பட்டுப்புடவைகள்
- மில்
- பேன்சி சேலைகள்
- காட்டன் கலெக்ஷன்ஸ்
- சுடிதார் மெட்ரியல்கள்
- ஆடவர் சூட்டிங்ஸ்
- சர்ட்டிங்ஸ்





# ராஜ்மஹால்

வெங்கலக்கடைத் தெரு, மதுரை-1.
போன்-2622647

AMC/MDU/06

தொட்டுத் தொடரும் ஒரு பட்டுப் பாரம்பரியம்.

ெசன்னையிலிருந்து கிளம்பும் போதே இந்த முறையாவது, குணாவைப் பார்த்தே ஆக வேண்டும் என்று மனசுக்குள் முடிச்சு போட்டுக்கொண்டான் கதிர்.

மனைவி ரமணியிடமும் சொல்லி வைத்தான்.

"குணா... என் க்ளாஸ்மேட்... அவனை இந்தப் பயணத்தின் போதாவது பார்க்கணும். நான் மறந்தாலும் நீ ஞாபகப் படுத்து. நம்ம கிராமத்துலருந்து நாலு கிலோமீட்டர் தள்ளி இருக்கு அவன் கிராமம். ஒவ்வொரு வருஷமும் குல தெய்வ பூஜைக்கு கிராமத்துக்குப் போகும்போதெல்லாம் அவனைப் பார்க்க நினைச்சு, வேலைப் பளு, நேரம் போதாத காரணத்தால் போய்ப் பார்க்காமலே திரும்பிடறேன். கில்ட்டியா இருக்கு..."

"கவலைப்படாதீங்க. முந்தின வருஷங்கள்ல பஸ்லதான் வந்து போய்க்கிட்டிருந்தோம். பஸ் பிடிக்கணுமேங்கற பரபரப்புல வேறு எங்கேயும் போக முடியாமப் போச்சு. இப்ப கார்ல போறோம். நிறைய நேரம் கிடைக்கும். உங்க பால்ய நண்பர் வீட்டுக்குப் போய்த் தாராளமாய்ப் பல மணி நேரம் இருந்து பேசிட்டு சாப்பிட்டுட்டே மெட்ராஸ் திரும்பலாம்" என்று புன்னகைத்தாள் ரமணி.

"வரப் போறேன்னு முன்கூட்டி உன் சிநேகிதனுக்குக் கடிதம் எழுதித் தெரிவிச்சியா! ஒவ்வொரு முறையும் கிராமத்துக்குக் கிளம்பறப்பதான் உனக்குப் பழைய ஞாபகம், படிச்ச ஞாபகம் எல்லாம் வருது. புருஷனைப் பார்த்தப்புறம் தாலி ஞாபகம் வர்ற மாதிரி..." என்றார் அப்பா.

கதிர் புன்னகைத்தான்.

'கடைசியாக எப்போது குணாவிற்குக் கடிதம் எழுதினோம்...' - யோசித்தான்.

கல்லூரி நாட்களில்!

இவன் காஞ்சிபுரத்தில் பாலிடெக்னிக்கில் சேர, அவன் வந்தவாசியில் கல்லூரியில் படிக்கப் போக, பள்ளிப்பட்டு உயர்நிலைப் பள்ளியில் இரண்டு வருடம் சேர்ந்து பழகிய நட்பு... கடிதங்கள் வாயிலாகவே கொஞ்ச காலம் புதுப்பிக்கப் பட்டு, ஏதோ ஒரு கட்டத்தில் நின்று விட்டது.

கதிர், டிப்ளமோ முடித்ததும் வெளிநாட்டில் வேலைக்குப் போய்த் திரும்பி, சின்னதாகப் பட்டறை போட்டு, கல்யாணம் பண்ணி, இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையாகி, சென்னையில் செட்டிலாகி, காலம் ஜெட் வேகத்தில் விரைந்து..

இப்போது முன் உச்சியிலும், இருதா,





# ஒரு நட்பின் முடிவு!

மீசை, தாடி உள்ளிட்ட பிரதேசங்களிலும் வெள்ளிக் கம்பி முளைத்து...

சென்ற மே மாதம் நாற்பத்திரண்டாவது பிறந்த தினத்துக்கு காரியசித்தி விநாயகர் கோயிலில் அபிஷேகம்.

சுத்தமாக இருபத்தைந்து வருடங்களாகின்றன கதிர், குணாவைப் பார்த்து... குணா கதிரைப் பார்த்து.

"அதிசயம்தான். பேப்பர்ல போடணும் இதை. இவ்வளவு வருஷங்களாகியும், தொடர்புகளே இல்லாத போதும், நண்பரை ஞாபகம் வச்சிருக்கீங்க. அவருக்கு உங்க நினைப்பிருக்கணுமே..."

"இருக்கும். நீ கவனிச்சிருந்தால் தெரியும். மாதம் ஒருமுறையாவது சாப்பாட்டு வேளையில் எனக்குப் புரையேறும்..." என்று சிரித்த கதிர்,

"உனக்குப் பிசிராந்தையார் - கோப்பெரும் சோழன் நட்பு தெரியும்தானே..." என்று கேட்டான்.

"உங்களில் யார் புலவர், யார் அரசர்..."

"இப்ப கார் வச்சிக்கற அளவு அந்தஸ்துல இருக்கிற என்னைப் பார்த்தால், என்னை 'மன்னா' என்பானோ என்னமோ அந்தப் புலவன். ஆமாம் ரமணி, குணா அருமையா கவிதையெல்லாம் எழுதுவான். +1, +2 ரெண்டு வருஷம்தான் சேர்ந்து படிச்சம்னாலும், அந்த ரெண்டு வருஷப் பழக்கம் 20 வருஷம் பழகினதுக்குச் சமம். யூஸீ... அவனைப் பற்றி நான் பெருமையாச் சொல்றதுக்குக் காரணமிருக்கு..."

"சொல்லியிருக்கீங்க. ஏழை. செங்கல் சூளையில வேலை பார்த்து சம்பாதிச்சு அம்மாவைக் காப்பாத்திட்டு, தானும் படிச்சுக்கிட்டு..."

"சுலபமாச் சொல்லிட்ட ரமணி. சூளை வேலை எவ்வளவு கஷ்டம். நான் நேர்ல பார்த்தேன்... மண்ணு மிதிச்சு, அச்சில் போட்டு ஆயிரம் கல் அறுத்தால் இவன் பங்குக்கு அறுவது ரூபாய் கிடைக்கும். அந்த இடத்துல புகையிலயும், புழுதியிலயும் அவன் நிக்கற கோலத்தைப் பார்க்கறப்ப, கண்ணுல தண்ணி வரும்..." என்ற போதும் கண்ணில் வந்தது தண்ணீர்.

நறுவிசாகத் துடைத்துக்கொண்டு காரை இயக்கியபடியே,

"டிகிரி முடிச்சதும் ஏதோ க்ளார்க்

படுதலம் சுகுமாரன்

வேலை கிடைச்சதுன்னு கேட்டப்பதான் எனக்கு ஆறுதலாச்சு. அப்புறம், நமக்குக் கல்யாணம் ஆன அதே மாசத்துலதான் அவனுக்கும் கல்யாணமாயிருக்கு. அவ்வளவு ஏன்... நமக்கு சுரேஷ், ப்ரீதின்னு இரண்டு செல்லம் போல் அவனுக்கும் ரெண்டு குழந்தைங்க. பாவம், போன வருஷம் அவன் தாய் தவறிட்டாங்கன்னு கேள்வி. இவ்வளவும் அவனைப் பத்தி அவ்வப்போது பராபரியாய்க் காதில் வந்து விழுந்தது. நேரில் பார்த்து இதெல்லாம் சொல்லி அசத்தணும்னு இருக்கேன். கஷ்டத்திலிருப்பான். கட்டாயம் உதவி செய்யணும் நான்..."

"பக்கத்துப் பக்கத்து கிராமம். இத்தனை வருஷமா ஒருத்தரையொருத்தர் பார்த்துக்கலே..."

"அதுக்கென்ன பண்றது? ரெண்டு கண்களும் பக்கம் பக்கமா இருந்தாலும் ஒண்ணையொண்ணு பார்த்துக்க முடியுதா...!" என்று சிரித்தான்.

திருவள்ளூர்...

திருத்தணி...

ஆர்.கே.பேட்டை...

அத்திமாஞ்சேரி என்று நூறு கிலோ மீட்டருக்கும் மேலான தூரத்தையும் விழுங்கிவிட்டு மலைச்சரிவில் காரை இறக்கும்போது,

"குணா ஊருக்குப் போயிட்டு, நம்ம ஊருக்குப் போகலாமே..." என்றான் பரபரப்புடன்.

"குலதெய்வம் கும்பிடப் போறப்ப நேரா நம்ம ஊருக்குத்தான் போவ ணும். பிறகுதான் மத்தது..." - பின் இருக்கையிலிருந்து அப்பா உத்தரவு போட்டார்.

கிராமத்துக்குள் காரில் போய் இறங்கியதும் வரவேற்பு பலமாக இருந்தது. 'சொந்தமாக வாங்கியது' என்றதும் ஜனங்கள் வாயைப் பிளந்தார்கள்.

கதிர் பெருமிதமாக உணர்ந்தான்.

வழக்கம் போல் உறவுகள், குலதெய்வ பூஜைக்கான ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தனர்.

இவர்கள் வந்தபின் செய்ய வேண்டிய காரியங்கள் என்று சில இருந்தன. பெற்றோரும், ரமணியும் அவற்றில் ஈடுபட,

## வருத்தம்!

* கிஷன்

திரையுலகமே ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் ஒன்பது வயது சிறுவன் மாஸ்டர் கிஷன் இயக்கும் 'சாதனை' படம், திரையிட ரெடி.

"இந்தப் படத்துல நான் ஒரு அனாதைச் சிறுவனாக நடிக்கிறேன். என் வயசுக் குழந்தைகள் இளம் வயதிலேயே அப்பா, அம்மா இல்லாம ஆதரவற்ற நிலையில் அலைந்து திரிகிற அவல நிலையை இன்றைக்குப் பார்க்கிறோம். அவர்களுடைய மனபாரங்கள், எண்ண ஓட்டங்கள்தான் கதை. இதுல வயசான அனாதை பாட்டியா வர்ற 'ஜெயஸ்ரீ' ரொம்ப நல்லா நடிச்சிருக்காங்க. தமிழ்ல அந்த கேரக்டருக்கு மனோரமா ஆச்சியை நடிக்க வெச்சா நல்லாயிருக்கும்னு யோசிச்சோம். இது நான் எடுக்கிற முதல் படம். இதுல தமிழ் ரசிகர்கள் பார்க்காத ஒரு முகமா இருந்தா நல்லாயிருக்கும்னு பலரும் சொன்னதால கன்னடம் மற்றும் ஹிந்தியில எனக்குப் பாட்டியா வாழ்ந்த 'ஜெயஸ்ரீ' மேடமையே நடிக்க வெச்சுட்டேன். எப்படியோ, ஆச்சி கூட நடிக்க முடியாதது வருத்தம்தான்" என்று பிஞ்சுக் குரலில் பேசுகிறான் இயக்குனர் மாஸ்டர் கிஷன்.

இப்படம் தமிழில் வெற்றி பெற வேண்டிய எல்லா முயற்சிகளையும் செய்திருப்பதாகக் கூறும் கிஷன், தம்மை தமிழகத் தாய்மார்கள் மகனாக ஏற்றுக் கொள்வார்கள் என்று பெரிதும் நம்புகிறான்.

- சுப்ரியா.

குழந்தைகள் விளையாடப் போக, தனித்து விடப்பட்ட கதிர், விவரமான ஆள் யாராவது தட்டுப்படுகிறார்களா என்று பார்த்தான்.

ஓர் ஆள் கிடைத்தார்.

"ஏண்ணே... குறிஞ்சியூர்னு வடக்கே ஒரு கிராமம் இருக்கே, அங்கே கார்ல போக சௌகர்யப்படுமா... முன்னே ஒத்தையடிப் பாதை இருந்தது..." என்று விசாரித்தான்.

"அந்த ஊரு இப்ப டாப்புல போயிருச்சு. சிமெண்டு தெரு. தார் ரோடுன்னு வசதிதான்."

"அங்கே... குணான்னு ஒருத்தர், என் கூட 82-83ல சேர்ந்து படிச்சவர்..."

"குணசேகரைச் சொல்றீங்களா... அட அவரும் இப்ப உங்களைப் போல காரு வாங்கியிருக்காரு. வேலை ரெண்டு மூணு செஞ்சிப் பார்த்து சரிவராம விட்டுட்டு. சொந்தமா செங்கல் சூளை போட்டு. பெரியாளா வந்துட்டாரு..." என்று சொல்லிக் கொண்டே போனான் அவன். கதிர் முகத்தில் ஏமாற்றம் மேகமாய்ச் சூழ்ந்தது. வசதியான குணாவை அவனால் கற்பனைகூட பண்ண முடியவில்லை.

"இந்தாடா கதிர், வழக்கத்தை விட சீக்கிரமே பூஜை முடிஞ்சுது. வா... எல்லோருமாவே சேர்ந்து உன் சினேகிதன் வீட்டுக்குப் போவோம். ஆமாம்... ஏன் உன் முகம் என்னவோ போலிருக்கு..."

"ஆமாம்பா. ஒரு முக்கியமான வேலை சென்னைல. உடனே போயாகணும். சீக்கிரம் எல்லோரும் கார்ல ஏறுங்க..."

"என்னங்க... வரும்போது எல்லாம் 'க்ளியர்' பண்ணிட்டு வந்தேன்னீங்க..."

"ஏதோ ஞாபகத்துல வந்துட்டேன். இப்ப நினைவுக்கு வந்துட்டுது. சுமான், அரி-யப்..."

எல்லோரும் காரில் புதைய, வந்த வேகத்தைவிடக் கூடுதல் வேகத்தோடு சென்னையை நோக்கி விரைந்தது கார். ●

• 'வெயில்' பாடல் வெளியீட்டு விழாவில்...




# உருகுதே...

ஷங்கர் இயக்கும் படங்களுக்கு இருக்கும் அதே அளவு எதிர்பார்ப்பு, அவர் தயாரிக்கும் படங்களுக்கும் வந்துவிட்டதில் பெரிதாக ஆச்சர்யம் இருக்க முடியாது. காதல், இம்சை அரசன் என்று தரமான தயாரிப்புதான் காரணம். அடுத்து வரும் 'வெயில்' படம் வரும் முன்பே அதன் பாடல்கள் பரபரப்பாக பேசப்பட்டுவிட்டன. இசை, ஜி.வி. பிரகாஷ்குமார். 'ஜென்டில்மேன்' படத்தில் 'சிக்குபுக்கு ரயிலே' பாடிய அந்தச் சுட்டிதான், இன்று வளர்ந்து இசையமைப்பாளராகி நிற்கிறார். ஆறு பாடல்களும் வித்தியாசமாய் இருக்கின்றன. சும்மாவா? பிரகாஷ் ஏ.ஆர். ரஹ்மானின் உறவினர்! சங்கர் மகாதேவன், ஸ்ரேயா கோசல் பாடியுள்ள 'உருகுதே' பாடல் கேட்பவரை உருக வைப்பது நிச்சயம். சமீபகாலமாய் தூள் பரத்தி வருகிற நா. முத்துக்குமார் இப்படத்தில் தனி ராஜ்ஜியம் நடத்தியிருக்கிறார். எம்-மகன் ஹிட்டாகி பரத்தை உற்சாகப்படுத்தியிருக்க, 'வெயில்' அவரை உயரத்தில் கொண்டு விடும் என்கிறார்கள். ஷங்கரின் தயாரிப்பு சோடை போகுமா என்ன?

- ஜஸ்.

# தீவிரவாதிகளின் கடமை!

**வா**டிகன் தலைவரான போப் பெனடிக்ட் 16 பேசிய ஒரு பேச்சுப் பொறி, பரவலாகத் தீயைப் பற்ற வைத்திருக்கிறது.

"விளக்கம் தரவேண்டும்" என்றது ஜோர்டான். "இருவித நாகரிகங்களின்



• போப்

மோதலைக் காட்டும் பேச்சு இது" என்றது எகிப்திய அரசு. பாகிஸ்தானும் தன் பங்குக்குக் கண்டனம் தெரிவித்தது.பல முஸ்லிம் நாடுகளிடமிருந்து எதிர்ப்பு, 'போப் மன்னிப்புக் கேட்க வேண்டும்' என்கிற நிலைக்குப் போய்விட்டது. இத்தாலியில் ஒரு கன்னிகாஸ்திரி சுட்டுக் கொல்லப்பட்டதுகூட இது தொடர்பாகத்தான் என்கிறார்கள்.

"நான் சொன்னது அந்த அர்த்தத்தில் இல்லை. அது என் சொந்தக் கருத்தும் அல்ல" என்று வருத்தப்பட்டிருக்கிறார் போப்.

ஜிகாத் குறித்த பேச்சு அது. அதாவது இஸ்லாமியத் தீவிரவாதிகளால் அவ்வப்போது அறிவிக்கப்படும் 'புனிதப் போர்.' ஒரு நூலிலுள்ள பகுதி. பதினான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த கிறிஸ்தவச் சக்ரவர்த்தி இரண்டாம் மானுவல் கூறியதை தம் பேச்சில் வழிமொழிந்திருக்கிறார் போப். "முகமது நபி புதிதாக எதைக் கொண்டு வந்திருக்கிறார்? வாள் முனையில் மனிதத் தன்மையின்றி மதத்தைப் பரப்பியவர் அவர்."

இதை மேற்கோளாகக் காட்டிவிட்டு "வன்முறை என்பது இறைவனின் இயல்புக்கும் ஆத்மாவின் தன்மைக்கும் முரணானது" என்றார்.

தவிர, போப்பின் கடந்த கால எண்ணங்களும் இப்போதைய எதிர்ப்புக்கு வழிவகுத்துள்ளன. முன்பு கார்டினல் ராட்சிங்கராக இருந்தபோது (அதுதான் அவரது இயற்பெயர்) துருக்கி, ஐரோப்பிய யூனியனில் இணைவதை அவர் விரும்பவில்லை. "சரித்திரபூர்வமாகப் பார்த்தால் துருக்கி வேறு கண்டத்தில்தான் இருந்து வந்திருக்கிறது. ஐரோப்பாவுடன் அது ஒரு போதும் இணைந்த தில்லை" என்றார். 'துருக்கி ஒரு முஸ்லிம் நாடாக இருப்பதால்தான் அவர் இப்படிக் கூறினார்' என்பதே பலரது கருத்து.

ஓரிரு வாரங்களுக்கு முன் இத்தாலியில் "மதத்தைக் காரணமாக்கிப் பிற மனிதர்களை வதைப்பதை ஒரு போதும் ஏற்றுக்கொள்ள முடியாது" என்று பேசியிருக்கிறார் போப்.

நவம்பர் மாதம் துருக்கிக்குச் செல்லவிருக்கிறார் போப். அவர் போப்பாகப் பதவியேற்ற பிறகு விஜயம் செய்யும் முதல் முஸ்லிம் நாடு இது.

எப்படியோ, இன்றைய நிலையில் பிரச்னைகளை திசை திருப்பாமல், நேரடியாகத் தீர்ப்பதற்கு வேறொரு 'ஆயுதம்' தான் பலனளிக்குமென்று தோன்றுகிறது. அது, ஒவ்வொரு மதத்திலும் உள்ள மிதவாதிகள், தங்கள் மௌனத்தைக் கலைத்துக்கொண்டு, தங்கள் மதத்தில் உள்ள தீவிரவாதிகளை வழிக்குக் கொண்டுவர முயற்சி செய்வதுதான்!

**ஜி.எஸ்.எஸ்.**

# வெம்மை

அருணா.செந்தில்குமரன்

தாய்ப் பறவையின்
இறகு பொத்திய
குஞ்சுகளாய்
உன் நினைவுகள்

கதகதப்பின் சுகத்தில்
முயங்கிக் கிடக்கிறது
மனசு

இதுபோதும் எனக்கு
இனி உன்னிடம்
விவரிக்க
பகிர்ந்துகொள்ள
சிலாகிக்க

ஏதுமில்லை
என்னிடம்

யாரும் கண்டுகொள்ள
முடியா தனிவெளியில்
நடந்துகொண்டிருக்கிறேன்

உன் நினைவுகளோடு
ஒரு கைக்குட்டை போல்
என்னுடன் பயணிக்கும்
உன் நேசங்கள்

அவ்வப்போது எடுத்து
முகமொற்றிக் கொள்கிறேன்
தனிமை வெம்மை
தாக்காதவாறு

# ஆனந்தத்தின் ரகசியம்!

வாழ்வில் எதற்கும் பெரிய தடை நம் மனசுதான். ஏதாவது கர்மம், கவலை, 'இது அப்படியாகணும்', 'அது அப்படியாகணும்', 'அப்படி ஆகுமோ ஆகாதோ?', 'எப்படி ஆயிடுமோ?' என்று பல தினுஸான எண்ணங்களின் பாரத்தில் நெரிபடுவது என்று நம்முடைய வாழ்க்கைப் பிரயாணம் ஆனந்தப் பாதையில் போக முடியாதபடி நம் மனசையே பெரிய தடையாகக் குறுக்கே போட்டுக் கொண்டிருக்கிறோம். விக்நேச்வரரை உபாஸித்து உபாஸித்து அவருடைய ப்ரஸாதத்தினால் அவர் மாதிரியே நாமும் குழந்தைகளாகிவிடுகிறோம். ஒரு கர்மமில்லை, கவலையில்லை, போனதையும் வருவதையும் குறித்த மனோபாரம் இல்லவே இல்லை என்றாகி, அப்பப்போ ஒரு ஸந்தோஷத்தில் குழந்தை மாதிரி நன்றாகச் சிரித்து அனுபவித்துக் கொண்டு, அதே மாதிரி, அப்பப்போ ஒரு துக்கம் வந்தாலும் அந்த நிமிஷம் மட்டும் அழுது விட்டு, ஆனால் அப்புறம் நினைத்து நினைத்து அழாமல்- இப்படிச் சிரிப்பு, அழுகை இரண்டும் இருந்தாலும் சிரித்து விளையாடுவது ஜாஸ்தியாக என்ற நிலையில் ஒரு குழந்தை இருப்பது போலவே இருந்துவிட்டோமானால் நம்மைவிட பாக்யசாலி வேறு யாருமில்லை. முக்யமாக, 'சென்று போனது இப்படியாச்சே; வரப்போவது இப்படியிருக்கணுமே' என்று ஓயாமல் நம்மைப் பிய்த்துப் பிடுங்கும் சிந்தனைச் சுமை, குழந்தைக்கு இல்லாததுதான் அதனுடைய ஆனந்தத்தின் ரகசியம். குழந்தை ஸ்வாமி கனமான யானை ரூபத்திலிருந்தாலும் இந்த விசாரச் சுமையில்லாமல் பரம லேசாக இருப்பவர். 'நெட்டிப் பிள்ளையார்' என்று அவரை லேசாகப் பண்ணுகிறோமல்லவா? நம்மையும் அவர் அப்படிப் பண்ணும்படி ப்ரார்த்திப்போம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

'குறும்பான கேரக்டராக இருந்தாலும் சரி... புரட்சிப் பெண் கேரக்டராக இருந்தாலும் சரி.. அடி.. தூள் கிளப்பி விடுவார்' - இப்படித்தான் சின்னத்திரை இயக்குநர்களிடம் ஷொட்டு வாங்கிக் கொண்டிருக்கிறார் தீபா வெங்கட்.

'கோலங்கள் சீரியல்ல 'உஷா' கேரக்டர் இப்போ ரொம்ப அடக்கி வாசிக்கற மாதிரி தெரியுதே.. உண்மையா?' என்று முதல் கேள்வியிலேயே தீபாவிடம் நம் வம்பை ஆரம்பித்தோம். அவரோ கொஞ்சமும் அலட்டிக்கொள்ளாமல், "ஆரம்பத்துல ரொம்ப வேகமாத்தான் இருந்தா



• 'சூர்யா' தொடரில் தீபா வெங்கட்... ரிஷி...

# "உங்களை எல்லாம் மிரட்டப் போறேன்!"

உஷா. அபிக்கு உஷா மாதிரி நமக்கு ஒரு தோழி இல்லையேன்னு பல பேரை ஏங்க வைக்கிற கேரக்டர்! அப்புறம் அவளுக்குத் திருமணம் ஆன பிறகு அடக்கி வைச்சுட்டாங்க. அதுல எனக்குக் கொஞ்சம் வருத்தம்தான். சொல்ல முடியாது: பழையபடி உஷா சிலிர்த்தெழுந்தாலும் ஆச்சர்யப்படுறதுக்கில்ல" என்று கூலாகச் சொல்லிவிட்டுச் சிரிக்கிறார்.

'ஆமா, ஜர்னலிஸ்ட் கேரக்டர்னா உங்களுக்கு ரொம்பப் பிடிக்குமாமே' என்று நாம் ஒன்றும் தெரியாதது போலக் கேட்க,

"ஆமாங்க... புதுசா 'சூர்யா'ன்னு ஒரு சீரியல் பண்ணிட்டிருக்கேன். இப்போ எல்லா மெகா சீரியல்லயுமே சினிமா ஹீரோயின்கள்தான் மெயின் கேரக்டர் பண்றாங்க. ரொம்பக் குறைவாத்தான் சீரியல் ஆர்ட்டிஸ்டுகளுக்கு மெயின் கேரக்டர் பண்ண சான்ஸ் கிடைக்குது. அப்படி ஒரு வாய்ப்பு எனக்கு இப்போ கிடைச்சது ஒரு வகையில சந்தோஷமாக இருந்தாக்கூட, ஆரம்பத்துல ரொம்ப பயமா இருந்துச்சு. ஆனா, இப்போ 'சூர்யா'வோட பரபரப்பு பல இடங்கள்லயும் பத்திக்கிச்சு" என்று

குஷியான தீபா,

"அந்த சீரியல்லதான் நான் ஜர்னலிஸ்டா வர்றேன். இன்னிக்கு இருக்குற டிரண்டுக்கு ஏத்த மாதிரியான சப்ஜெக்ட். நாட்டுல நடக்குற தப்புகளைக் கண்டுபிடிச்சு அம்பலப்படுத்தற தைரியமான கேரக்டர். ராஜ்பிரபு திரைக்கதைல, சுந்தரேஸ்வரன் டைரக்ஷன்ல உங்களை எல்லாம் மிரட்டப் போறேன்... இந்த அளவுக்கு நான் நம்பிக்கையா பேசறதுக்குக் காரணம் யார் தெரியுமா?" என்று கேள்வியைப் போட்டு விட்டுப் பதிலுக்கு வெயிட் பண்ண,

'தெரியலியே... நீங்களே சொல்லுங்க..' என்று அவரையே பேச விட்டோம்.

"என்.டி.டி.வியோட ஜர்னலிஸ்ட் பர்காதத்தான் சூர்யாவோட ரோல் மாடல். ரொம்ப தைரியமான பொண்ணு அவங்க. டிவியில அவங்க பேசற, நடக்கற விதம் எல்லாமே ரொம்பப் பிரமிப்பா, ஆச்சர்யமா இருக்கும். என்னோட கேரக்டருக்காக அவங்களைத்தான் இப்போ உன்னிப்பா கவனிச்சுட்டு இருக்கேன். என்ன.. அவங்க மாடர்ன் காஸ்ட்யூம்ல இருப்பாங்க. சூர்யா காட்டன் புடைவைல கலக்குவா...." என்கிறார் புன்னகை கொஞ்சமும் குறையாமல்.

'நீங்க நடிச்ச சீரியல்கள்ல ரொம்பப் பிடிச்சதுன்னு எதைச் சொல்வீங்க?' என்றால் துள்ளி வருகிறது பதில் : 'சித்தி'. "நான் இந்த ஃபீல்டுக்கு வந்து பதினோரு வருஷமாச்சு. இதுவரைக்கும் முப்பது சீரியல்கள் நடிச்சுட்டேன். இதுல சட்டுன்னு ஞாபகத்துக்கு வர்றது சித்தி மட்டும்தான்" என்றவரிடம்,

'சீரியல்களை செலக்ட் பண்றது பேனரை வைச்சா, இல்ல ஸ்கிரிப்டை வைச்சா?' என்றோம்.

"பெரிய பேனர்னா நிச்சயமா நல்ல ஸ்கிரிப்டைத்தான் எடுப்பாங்க. அதே போல நல்ல ஸ்க்ரிப்டா இருந்தா எந்தப் பெரிய பேனரும் அதை மிஸ் பண்ண மாட்டாங்க. எப்படி சூப்பரா சமாளிச்சேனா..." என்று கண் சிமிட்டுகிறார் தீபா.

- முராரி




• ஜி.எஸ்.3 திட்ட விழாவில் அதன் டைரக்டர்கள்...

# காற்றுள்ளபோதே...

இந்திய நிறுவனமான ஜி.எஸ்.3 அமெரிக்காவின் 'புரூக்வுட் ஸ்டாஃபிங்' நிறுவனத்துடன் இணைந்து இந்தியாவிலிருந்து செவிலியரைத் தேர்வு செய்து, அமெரிக்காவில் வேலைவாய்ப்பைப் பெற்றுத் தருகிறது. அங்கு எவ்வாறு செயல்பட வேண்டும், கடைப்பிடிக்க வேண்டிய பண்புகள், ஆங்கில அறிவு உள்ளிட்ட பல பயிற்சிகளை ஜி.எஸ்.3 இந்தியா நிறுவனம் செவிலியர்களுக்கு வழங்கி வருகிறது. இதன் டைரக்டர் வினோத் சங்கரனும் அமெரிக்க புரூக்வுட் ஸ்டாஃபிங் நிறுவனர் மெண்டல் ஸில்பெர்பெர்க்கும் இணைந்து இந்த வருடம் மூன்று முக்கிய திட்டங்களைச் செவிலியர்களுக்கு வகுத்துள்ளனர்.

சிறப்பாகப் பணியாற்றும் செவிலியர்களுக்கு 'ஜிஎஸ்.3 நற்செவிலியர் விருது' வழங்கப்பட உள்ளது.

'ஜி.எஸ்.3 செவிலியர் கல்வி பண உதவித் திட்டம்' என்ற ஒன்றும் நிறுவப்பட்டுள்ளது. நன்றாகப் பயிலும் இரண்டு செவிலியர்களுக்கு இத் திட்டத்தின் மூலம் பண உதவி அளிக்கப்பட உள்ளது.

'Tabloid Indi AM' என்னும் செய்தி ஏடு வெளியிடப்பட உள்ளது. அதில் செவிலியர்களுக்குத் தேவையான அத்தனை குறிப்புகளும் செய்திகளும் இடம் பெற உள்ளன.

இந்த மூவகையான திட்டங்களின் மூலம் செவிலியர்களை அடுத்த கட்டத்துக்கு அழைத்துச் செல்ல முயல்கின்றன இந்நிறுவனங்கள். காற்றுள்ள போதே தூற்றிக்கொள்வோம்.

- அம்பிகா

"கேன்ஸரால்தான் என் தாய் - தந்தை இறந்தனர். நான் தினமும் எனக்கே சொல்லிக்கொள்ளும் அறிவுரை, 'புகை பிடிப்பதை நிறுத்திவிட வேண்டும்' என்பதே. கேன்ஸர் சிகிச்சைக்காகும் செலவுகள் மிக அதிகம். மருந்துகள் மிகவும் விலை உயர்ந்தவை. ஆனால், பயோகான் போன்ற கம்பெனிகளின் புது முயற்சியால் இனி பலரும் நல்ல முறையில் சிகிச்சை பெறுவார்கள் என நம்புகிறோம்..." என்று மனம் திறந்து பேசியிருக்கிறார் நடிகர் ஷாருக்கான்! கிரண் மஜூம்தார் ஷாவினுடைய பயோகான் நிறுவனத்தின் கேன்ஸருக்கான புதிய மருந்து வெளியீட்டுக்காக அண்மையில் பெங்களூருக்கு வந்திருந்த போதுதான் இப்படிப் பேசினார் ஷாரூக். "இந்தப் புதிய மருந்து, மார்க்கெட்டில் உள்ள மற்ற மருந்துகளைவிட 40 சதவிகிதம் விலை குறைவு" என்றார் கிரண் மஜூம்தார்.




# இப்படியும் ஒரு திருடன்!

திருடன்களுள் பலவகை. பெங்களூரிலிருக்கும் ஒரு திருடன், பெரியோர்களிடத்தில் மிகவும் மரியாதை கொண்டவன். சுப்ரமண்யபுரத்திலிருக்கும் பாக்யலக்ஷ்மி என்ற பெண்மணியிடம் கத்தியைக் காட்டி, 'என் அம்மாவுக்கு உடல்நிலை சரியில்லை. எனக்கு உடனே 800 ரூபாய் வேணும்' என்று கேட்க, பாக்யலக்ஷ்மியும் தம் நகையைக் கழற்றிக் கொடுத்து விட்டார். திருடன் உடனே தடாலென்று அப்பெண்மணியின் காலில் விழுந்து நமஸ்கரித்துவிட்டுச் சிட்டாக ஓடிவிட்டான்!

'பொது மக்கள் தங்கள் பிரச்னைகளை என்னிடம் சொல்லலாம்' என்று கர்நாடக முதலமைச்சர் குமாரசுவாமி தன் 'செல்' நம்பரை வெளியிட்டிருக்கிறார். பெங்களூர் மாணவி மீனாட்சி, அண்மையில் முதலமைச்சரிடம், 'இந்த ஏழை, இன்ஜினீயரிங் படிக்க நீங்கள்தான் பண உதவி செய்ய வேண்டும்' என்று சொல்ல, முதலமைச்சர் மறுநாள் மைசூர் அருகே உள்ள 'பெர்யா' என்ற கிராமத்தில் நடைபெற்ற ஒரு பள்ளி விழாவில் வைத்து மீனாட்சியின் சான்றிதழ்களை வாங்கிப் பார்த்துவிட்டு, அங்கேயே ரூ.25000/- பணத்தைக் கொடுத்திருக்கிறார்.

மறைந்த பிரபல கன்னட நடிகர் ராஜ்குமாரின் விருப்பப்படி, அவர் இறந்த பிறகு அவருடைய கண்கள் அகற்றப்பட்டு, இருவருக்குப் பொருத்தப்பட்டன. அதன்பின், முன்னாள் பிரதமர் தேவகவுடா, முதலமைச்சர் குமாரசாமி, லஞ்ச ஒழிப்புத் துறை அதிகாரி சந்தோஷ் ஹெக்டே, நடிகர்கள் விஷ்ணுவர்தன், சிவராஜ்குமார் (ராஜ்குமாரின் மகன்) உட்பட 65 பேர் தங்கள் மறைவுக்குப் பின் தங்கள் கண்களைத் தானம் செய்ய விருப்பம் தெரிவித்திருக்கிறார்கள்.

**- லதா சேகர்,**
**அனிதா ராமச்சந்திரன்**



# சுண்டுவின் சந்நியாசம்!

நம்ம சுண்டுவை உங்களுக்குத் தெரியுமோ, இல்லையோ? தெரியும் என்று ஒப்புக்கொண்டு விடுங்கள்! தெரியாது என்று நீங்கள் சொன்னால், அவன் உங்களை விட்டு விடப் போகிறானா என்ன? முதுகுவலிக்கு ஆளாவதுதான் பலனாக முடியும்.

முதன் முதலில் சுண்டுவை நான் சந்தித்த போது அப்படித்தான் சால் ஜாப்பு சொல்லிப் பார்த்தேன். திடீரென்று முகத்தில் ஒரு பலமான தட்டு விழவே, திடுக்கிட்டுத் திரும்பினேன். சுண்டு உட்கார்ந்து கொண்டிருந்தான். "என்ன, அப்பேன்! ஏன் முழிக்கிறாய்! சுண்டுவை அடையாளம் தெரியவில்லையோ?" என்று என் இரண்டு தோள்களையும் பிடித்துக் குலுக்கினான். பள்ளிக்கூட ஆசிரியர்களின் கூட்டம் ஒன்றில் நான் பின் வரிசையில் உட்கார்ந்து சொற்பொழிவுகளைச் செவிமடுத்துக் கொண்டிருந்த போது இந்த மகத்தான சம்பவம் நடந்தது.

"ஆமாம் தெரியத்தான் இல்லை!" என்றேன்.

"ஓஹோ!" என்று சுண்டு சிரித்துவிட்டு, "அந்தக் காலத்தில் எப்படி இருந்தாயோ, அப்படியேதான் இன்னமும் இருக்கிறாய். கொஞ்சங்கூட உருவத்திலோ, குணத்திலோ மாறுதல் இல்லை!" என்றான்.

"எந்தக் காலத்தில்?" என்று கேட்டேன்.

"என்னப்பா பெரிய ஆளாயிருக்கிறாயே? சிதம்பரத்திலே படித்துக் கொண்டிருந்த காலத்திலேதான்."

நான் சிதம்பரத்துக்கு அதுவரையில் போனதே கிடையாது. ஆனால் மேலும் மறுதலித்தால் முதுகுக்கு அபாயம் வரும் என்று பயந்து, "சரிதான்!" என்றேன்!

"ஏனப்பா கிருஷ்ணசாமி, என்னை ஏமாற்றலாமென்றா பார்த்தாய்?" என்று சொல்லி மறுபடியும் முதுகில் ஒரு தட்டு தட்டினான்.

"எனது நாமதேயம் கிருஷ்ணஸ்வாமி இல்லை, நாராயணஸ்வாமி!" என்றேன்.

"ஆகா! வந்துட்டாயா வழிக்கு! அப்படிச் சொல்லு. எங்கே கிருஷ்ணசாமி என்றதும், உன் பெயர் கிருஷ்ணசாமி தான் என்று சொல்லி டிமிக்கி கொடுக்கப் பார்க்கிறாயோ என்று சோதித்தேன். அப்பனே, நாராயணசாமி! உன் பெயர் எனக்குத் தெரியாதென்றா நினைத்துக் கொண்டாய்!"

உண்மையில் என் பெயர் நாராயணசாமியும் இல்லை! ஆனால் அதைச் சொல்லி என்ன பிரயோஜனம்?

இப்பேர்ப்பட்ட ஆளைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டும் என்று நினைத்து, "சுண்டு இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"என்னத்தை



**அமரர் கல்கி**

செய்கிறது? உன் முதுகுக்குப் பின்னால் உட்கார்ந்துகொண்டு பள்ளிக்கூட உபாத்தியாயர்களின் துயரங்களைப் பற்றிய அழுகையைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்! இப்படி எத்தனையோ நானாகத்தான் பேசுகிறார்கள். யாருக்கு என்ன பிரயோஜனம்? புதுடில்லி வரையில் போய் வைஸ்ராயின் தாடியைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கத் தயாராயிருந்தால் அல்லவா வழி பிறக்கும்! சுத்த டாணா டாவன்னாகள்!"

"கொஞ்சம் மெதுவாய்ப் பேசு!" என்று அவனை கெஞ்சிக் கேட்டுக்கொண்ட பிறகு, "நான் கேட்கிறேனே என்று கோபித்துக் கொள்ளாதே! அப்படியானால், நீ உபாத்தியாயர் இல்லையா?" என்றேன்.

"நல்ல கேள்வி கேட்டாய், அப்பா! டெபுடி கலெக்டருக்குப் பிள்ளையாகப் பிறந்துட்டு, அந்த 'பாழும் பரீட்சையிலே ஒரு மார்க்கு குறைந்து போனதினாலே ஐ.சி.எஸ்.ஸுக்குப் போக முடியாமல் உட்கார்ந்திருக்கேன் நான். என்னைப் பார்த்து வாத்தியார் வேலையிலிருக்கிறாயா என்று நீ கேட்கிறாயே! உன்னைப் போன்ற ஆசாமிகள் இருக்கிறது வரையில் இந்த உலகம் உருப்படப் போகிறதில்லை! ஒரு நாளும் உருப்படப் போகிறதில்லை! நான் சொல்லுகிறது தெரிந்ததோ, இல்லையோ!" என்று என் முதுகின் மூலம் அதை அழுத்தமாய்த் தெரியப்படுத்த முயன்றான்.

"தெரிந்தது அப்பனே! தெரிந்து விட்டது!" என்று கதறினேன்.

இம்மாதிரியாக எனக்கும் கண்டுவுக்கும் அறிமுகம் ஏற்பட்டது. அப்புறம் கண்டுவும் நானும் எதிர்பாராத இடங்களில் எதிர்பாராத விதமாகவெல்லாம் சந்தித்து, நாளொரு முதுகும் பொழுதொரு தட்டுமாக எங்கள் நட்பை வளர்த்துக்கொண்டு வந்தோம்.

ஒருநாள் கண்டுவைச் சந்தித்தபோது "இப்போது என்ன செய்கிறாய்" என்று கேட்டேன்.

"அப்படிக் கேள், சொல்கிறேன். இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்றுதானே கேட்கிறாய்? இந்த உலகத்துக்குப் புத்தி புகட்ட வழி தேடிக் கொண்டிருக்கிறேன். இந்த உலகம் இருக்கிறதே; மகா முட்டாள் உலகம். பணம் உள்ளவனுக்குத்தான் இந்த உலகத்தில் மதிப்பு. பணக்காரன் என்னத்தை உளறிக் கொட்டினாலும் வாயைப் பிளந்துகொண்டு கேட்கிறார்கள். பணமில்லாதவன் எவ்வளவு அறிவாளியாயிருந்தாலும் அவன் பேச்சு அம்பலத்தில் ஏறுகிறதில்லை."

"உலகம் அப்படித்தான் இருக்கிறது. என்ன செய்கிறது?" என்று கண்டுவை ஆமோதித்தேன்.

"ஆனால் உலகம் என்ன செய்யும்? உலகத்தைக் குறைகூறி என்ன பயன்? உலகத்தைப் படைத்த கடவுளைச்



சொல்ல வேண்டும். நான் மட்டும் கடவுளாயிருந்தால் என்ன செய்வேன் தெரியுமா? நமது அனுகுண்ணி புனுகுண்ணி செட்டியார், அண்ணாமலேரியா முதலியார், அப்பண்ணா அபக்கண்ணா அய்யங்கார், கிருபணாஜி தசல்பாஜி ஐயர், டபின் நிமோனியா டிலாமியா, திஜோடியா டிமிக்கிலால் டிங்கர்லால், பயானதாஸ் மயானதாஸ் பயங்கர்லால் ஆகிய அவ்வளவு பணக்காரப் பேர்வழிகளையும் கூப்பிட்டு வரிசையாக நிறுத்துவேன். நிறுத்தி, 'உங்கள் ஒவ்வொருவரிடமும் எவ்வளவு பணம் இருக்கிறது? உண்மையைச் சொல்லுங்கள்!' என்று காதைப் பிடித்துத் திருகுவேன். அவர்கள் உண்மையைச் சொல்லியாக வேண்டும். சொல்லாவிட்டால் யார் விடுகிறார்கள்! பிறகு, 'இவ்வளவு பணத்தையும் என்ன மாதிரி செலவு செய்யப் போகிறீர்கள்?' என்று கேட்பேன். அவர்கள் திருதிருவென்று விழிப்பார்கள்! 'செலவு செய்ய வழி தெரிந்த பேர்வழி இதோ ஒருவன் இருக்கிறான். ஒவ்வொருவரும் உங்கள் பணத்தில் சரிபாதியை நமது சுண்டுவிடம் உடனே ஒப்புவித்து விட்டு மறுகாரியம் பாருங்கள்!' என்பேன். அவர்கள் அப்படியே செய்வார்கள். செய்யாவிட்டால் யார் விடுகிறார்கள்? தானே கதறிக்கொண்டு பணத்தைக் கொண்டு வந்து கலகலவென்று கொட்ட வேண்டாமா?

ஆனால் சுண்டுவின் இஷ்டப்படி கடவுள் நடப்பதாகத் தெரியவில்லை. எனவே என்னிடம் ஒரு ஐந்து ரூபாய் நோட்டும், டிராம் செலவுக்கென்று தனியாக நாலு அணாவும் வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தான்.

அடுத்த தடவை நான் சுண்டுவைப் பார்த்தபோது, "பணமா! சீ! பணம் இங்கே யாருக்கு வேண்டும்? பணத்தைக் கொண்டு போய் உடைப்பிலே போடு!" என்றான். நான் திடுக்கிட்டு நிற்கையில், "பணத்தினால் மனித வர்க்கமே நாசமடைந்து வருகிறது! பணக்காரர்கள் தான் உலகத்தை பாழ் பண்ணி வருகிறார்கள்! பணம் சம்பாதிக்கிற எண்ணத்தை நான் விட்டுவிட்டேன்!" என்றான்.

"பின்னே என்ன உத்தேசம் செய்திருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"உலகத்தை உத்தாரணம் செய்யப் போகிறேன். மனித வர்க்கத்தை மகோந்நத நிலைமைக்குக் கொண்டுவரப் போகிறேன்! ஆமாம்; தீர்மானம் செய்து விட்டேன்!" என்றான்.

"எப்படி!" என்று கேட்டேன்.

"எப்படியா! சொல்கிறேன், கேள். நான் எழுத்தாளன் ஆகப் போகிறேன். அச்சடித்த எழுத்துக்கு உள்ள சக்தி உலகத்தில் எதற்கும் இல்லை. ஒரு விஷயம் அச்சில் வந்துவிட்டதானால், முட்டாள் ஜனங்கள் அது அவ்வளவு அபத்தமானாலும் அப்படியே விழுங்கி விடுகிறார்கள்! இந்த உலகத்தை முன்னுக்குக் கொண்டு வருவதற்கு எழுத்தாளனாவது ஒன்றுதான் சரியான வழி!" என்றான்.




# உயிர் துடிப்பு!

பிரபல தொழிலதிபர் அவர். சினிமா எடுக்க வேண்டுமென்பது அவரது நீண்ட நாள் கனவு. ஆனால் ஆழம் தெரியாமல் காலை விடக்கூடாது என்று யோசனை. நல்ல கதையுடன் வருகிறார் ஒரு இயக்குநர். கதை தந்த தைரியத்தில் தவம் கலைந்து தயாரிப்பில் குதித்து விட்டார் தொழிலதிபர். படம், 'ஆவணித் திங்கள்'. டைரக்டர், ஹரிகிருஷ்ணா. இது முதல் படம். கே.எஸ்.ரவிகுமாரின் சீடர். நீண்டகாலத் திரையுலக அனுபவமுள்ளவர். சரி, தயாரிப்பாளர்? ராஜாராம் ரெட்டி. வஞ்சனையில்லாமல் செலவு செய்திருக்கிறார்.

"உறவுகள்தான் ஒரு மனிதனின் உயிர்த் துடிப்பு. அவன் வாழ்க்கையில் பூரணத்துவத்தை உணர்வதும் உறவுகளால் தான். சொந்தங்களற்ற ஒருவன், தனக்கான சொந்தங்களைத் தேடும்போது ஏற்படும் சிக்கல்களை சுவாரஸ்யமாகச் சொல்லும் படம்தான் ஆவணித் திங்கள்" என்று படத்தின் ஒன் லைனைச் சொல்லும் டைரக்டர் ஹரிகிருஷ்ணா, கதைச் செறிவுள்ளவர் என்று பலரால் பாராட்டப் பெற்றவர்.

தயாரிப்பாளர், இயக்குநரோடு, இப்படத்தின் கதாநாயகன் ஸ்ரீகுமார் மற்றும் நாயகிகள் தேஜினி, மதுஷாவும் புதுமுகங்களே. எழுபது அடி ஆழ கிணற்றில் தைரியமாக இறங்கி நடித்த ஸ்ரீகுமாருக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்கிறது படக்குழு. பார்ப்போம்!

- சுந்தரவள்ளி

"ரொம்ப சந்தோஷம்!" என்றேன்.

"ஆனால் உங்களை மறந்து விடுவேன் என்று பயப்படாதே! உலகத்தை முன்னுக்குக் கொண்டு வந்தவுடனே உன்னையும் கவனித்துக் கொள்கிறேன்!" என்று அபயம் அளித்தான்.

மறுபடியும் கண்டுவைப் பார்த்த போது, "எழுத்தாளன் ஆகும் முயற்சியில் எவ்வளவு தூரம் வெற்றியடைந்திருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"அப்பனே! உலகத்திலே வேறு எந்தத் தொழில் வேணுமானாலும் செய்யலாம். தெருக் கூட்டலாம்; ஹோட்டல் வைக்கலாம்; மந்திரி வேலை வேணுமானாலும் பார்க்கலாம். ஆனால் எழுத்தாளனாக மட்டும் ஆகக்கூடாது. அதிலும் நமது நாட்டில் இப்போது உள்ள பத்திரிகையாசிரியர்கள் இருக்கும் வரையில் எழுத்தாளனாகவே ஆகக்கூடாது. பத்திரிகாசிரியர்களா இவர்கள்? சுத்தத் திருடர்கள்!"

"என்னப்பா இப்படி ஒரேயடியாக வெளுத்து வாங்குகிறாய்?"

"பின்னே என்ன என்று கேட்கிறேன்! ஓரணா, இரண்டணா ஸ்டாம்புகளைத் திருடிக் கொள்கிறார்கள். அனுப்பிய கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதும் கிடையாது!"

"ஆமாம் அப்பா, ஆமாம்! அநேக பத்திரிகாசிரியர்கள் அப்படித்தான் செய்கிறார்கள்!" என்றேன்.

"ஓஹோ! நீ மட்டும் தப்பித்துக் கொள்ளலாம் என்று பார்க்கிறாயோ? நீயும் அதே வர்க்கந்தானே!"

"ஆம்; வாஸ்தவந்தான்! மன்னித்துக் கொள்!" என்றேன்.

"மன்னிக்கிறதாவது, மண்ணாங்கட்டியாவது? நீங்கள் பத்திரிகாசிரியர்கள் இருக்கிறீர்களே, மகா குரோதகர்கள்! எழுத்தாளர்கள் உயிரோடிருக்கும்போது அவர்களை பட்டினி போட்டுக் கொல்லுவீர்கள். செத்துப்போன பிறகு நிதி வசூல் செய்து ஞாபகச் சின்னம் கட்டுவீர்கள்!"

"போகட்டும்! அது ஒரு திருப்தியாவது இருக்கிறதோ இல்லையோ?"

"நல்ல திருப்தி!"

"சரி, மேலே என்ன செய்யப் போகிறாய்?" என்றேன்.

"இனிமேல் ஒருவரை நம்பி ஒரு காரியம் செய்வதில்லையென்று தீர்மானித்து விட்டேன்."

"அப்புறம்..."

(தொடரும்)

# அறுபத்து நான்கு கோடியின் பட்டியல்!

அந்தச் சிக்கல் என்ன தெரியுமா?

இவர்களுக்குத் தெரியாத விஷயம்... ஆனால் புரிகிற மாதிரி அதைச் சொல்ல வேண்டும்!

புதிதாகப் படைப்பதை - கிரியேட் சம்திங் - கிரியேட்டிவிட்டி என்றெல்லாம் நாம் சொல்கிறோம்.

புதிதாக ஒன்றைப் படைப்பதுதான் கிரியேட்டிவிட்டி, இல்லாத ஒன்றை இயற்றுவதுதான் கிரியேட்டிவிட்டி என்றால், ரவிவர்மாவை ஒரு படைப்பாளி என்றே சொல்ல முடியாது! இல்லாத ஒன்றை அவர் வரைந்து காட்டவில்லையே. இருக்கிற ஒன்றுதான்; நமக்குத் தெரிந்த ஒன்றுதான் - அதையே வித்தியாசமாகக் காண்பித்தார். அப்படியானால், தெரிந்த ஒரு விஷயத்தைத் தெரியாத மாதிரி காட்டினாலும் சரி, ஏற்கெனவே தெரிந்த விஷயத்தைச் சுலபமாகப் புரிய வைத்தாலும் சரி - அதுதான் கிரியேட்டிவிட்டி.

சற்று நினைத்துப் பார்ப்போம் - ரவி வர்மா எவ்வளவு பெரிய கிரியேட்டிவ் ஆர்டிஸ்ட்? இன்று பல வீடுகளில் உள்ள பூஜை அறைகளில் இருக்கும் தெய்வங்களின் ஓவியங்கள், ரவிவர்மா நமக்குக் கொடுத்தவைதான். நமக்கோ லக்ஷ்மியைத் தெரியும், சரஸ்வதியைத் தெரியும். எத்தனை வருஷங்களாகத் தெரியும் என்று கேட்டால், பிறந்ததிலிருந்து தெரியும்; எங்கள் அம்மா - பாட்டி கதை சொல்லியிருக்கிறார்கள்; அதனால் தெரியும் என்போம். ஆனால், நமக்கு ஏற்கெனவே நன்கு தெரிந்த ஒன்றை ரவி வர்மா புதுவிதமாகப் போட்டுக் கொடுத்தாரே, அதற்குப் பெயர்தான் கிரியேட்டிவிட்டி.

அப்படியானால் கிரியேட்டிவிட்டி என்பது எங்கிருந்தோ வரவில்லை. இல்லாத ஒன்றை யாருமே புதிதாகப் படைத்துவிடுவதில்லை. எல்லாமே பகவானுடைய படைப்பிலே ஏற்கெனவே இருக்கின்றன. இங்கு அந்தப் படைப்புக்குள்ளிருந்து எடுத்துக் கொடுப்பதுதான் கிரியேட்டிவிட்டி.



ஆகவே பாஸ்கரராயருக்கு என்ன சிக்கல் வந்தது என்றால், இவர்களுக்குத் தெரியாத ஒன்றைப் புரிகிற மாதிரி சொல்ல வேண்டும்!

புரியாததைப் புரிய வைப்பது ரொம்ப கஷ்டம். ஏற்கெனவே தெரிந்த ஒன்றைச் சொல்லித்தான் புரிய வைக்க முடியும்.

பாஸ்கரராயரிடத்தில் இவர்கள் என்ன கேள்வியைக் கேட்டால், இவர்களுக்குத் தெரியாத ஒன்றை அவரால் புரிய வைக்க முடியும் என்று யோசித்தார் குங்குமானந்தர். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்து, இதுவரை எந்தக் கிரந்தத்திலும் சொல்லப்படாத விஷயத்தை, யாரும் விளக்கம் கொடுக்காத ஒரு விஷயத்தை பாஸ்கர ராயரிடம் கேள்வியாகக் கேட்டார்கள்.

அந்தக் கேள்வி என்ன தெரியுமா...?

ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்தில் ஒரு

**சுதா சேஷய்யன்**

நாமம் வருகிறது - 64 கோடி யோகினிகள் நின்று அம்பாளை ஸேவிக்கிறார்கள் என்று சொல்கிற நாமம்... ஒருத்தர் இரண்டு பேர் அல்ல; 64 கோடி பேர்!

ஒரு கோடி என்று எண்ணில் எழுத வேண்டும் என்றாலே நாம் யோசிக்க வேண்டும் - ஒன்று போட்டுவிட்டு எத்தனை பூஜ்யம் போடுவது என்று யோசிக்க வேண்டுமில்லையா? 'இரு இரு!' என்று விரல் விட்டு எண்ணியோ, பூஜ்யங்களைப் பின்நோக்கிக் கணக்குப் போட்டுப் பார்த்தோதான் கோடி எழுத முடிகிறது நம்மால்!

அறுபத்துநாலு கோடி யோகினிகள் ஸேவை செய்து கொண்டிருந்தார்கள் என்றால்...? எத்தனை பெரிய எண்ணிக்கை!

'மஹா சதுஷ்ஷஷ்டி யோகினி கணஸேவிதா' என்பது அந்தத் திருநாமம். அதைத்தான் கேட்டார்கள் அந்தப் பண்டிதர்கள், பாஸ்கரராயரிடம்.

எங்கேயிருக்கிறது இதற்கான பட்டியல்?

பாஸ்கர ராயர் காலம் வரையிலும், வியாக்யானம் எழுதிய யாரேனும் பட்டியல் கொடுத்திருக்கிறார்களா என்றால், இல்லை.

அப்படியிருக்க, இவர்கள், '64 கோடி யோகினிகள் யார் யார்?' என்று கேட்கிறார்கள்.

அறுபத்து நாலு பேர். இருந்தால் அத்தனை பேருடைய பெயர்களை ஞாபகம் வைத்துக்கொள்வதே கஷ்டமான விஷயம்... தினந்தோறும் சஹஸ்ரநாமம் பாராயணம் செய்பவர்களாக இருக்கட்டும், அபிராமி அந்தாதி பாராயணம் செய்பவராக இருக்கட்டும்... ஒரு நிமிஷம் நிறுத்தி 'அந்த இடத்தில் என்ன?' என்று கேட்டால், அத்தனை பேருமே தடுமாறுவார்கள்! ஆரம்பத்திலிருந்து மீண்டும் ஆரம்பித்துச் சொன்னால்தான் சொல்ல வரும். ராகத்தில் பாடிப் பழக்கப்பட்டிருப்பவர்களுக்கு, திடீரென்று ராகத்தை மாற்றினால் அதே நாமாக்களைப் பாட வராது!

அறுபத்தைந்து நாமாக்களே நமக்கு வரிசையில் வராது என்றால், அறுபத்து நாலு கோடி பேரையும், அவர்கள் யார்? ஸ்வரூபம் என்ன? குணம் என்ன? நக்ஷத்திரம் என்ன? என்ன நக்ஷத்திரத்தைச் சேர்ந்தவர்கள் என நன்கு, தடங்கலில்லாமல் சொன்னாராம் பாஸ்கரராயர்!

இது என்றைக்கோ வேத காலத்தில் நடந்த நிகழ்ச்சி அல்ல. அப்படியிருந்தால், 'வேத காலத்தில் ஏதோ நடந்தது என்று யாரோ சொன்னார்கள் - இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் யாரோ சொன்னார்கள் என்றால் அதற்கு ஆதாரம் என்ன?' என்று கேட்கலாம். பதினேழு - பதினெட்டாம் நூற்றாண்டிலே அறுபத்தாறு கோடி பேருடைய பெயர்களையும் ஸ்வரூபங்களையும் குணங்களையும் அதுவரைக்கும் வேறு எங்குமே இல்லாத வியாக்யானமாக பாஸ்கரராயர் சொன்னார். அதிலும் எல்லார் முன்னிலையிலும் வேக வேகமாகச் சொன்னார் - தங்கு தடையின்றிச் சொன்னார் என்றால், சாக்ஷாத் அம்பாள் அவரது திருநாக்கிலிருந்து சொல்ல வைத்தாள் என்பதைத் தவிர வேறு என்ன அதற்கு அத்தாட்சி!

> “அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்!”

### அம்பாள் உபாஸகர்கள்

பாஸ்கரராயருடைய பெருமை ஒரு பக்கம். அம்பாள் தன்னை உபாஸிக்கக் கூடியவர்களை எப்படி கூடவே இருந்து வழிநடத்துகிறாள் என்பதையும் இது தெரிவிக்கிறது.

அம்பாள் உபாஸகர்களாகப்பட்டவர்கள் எல்லாராலும் வழிபடப்படுகிறார்கள். ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பெரிய அம்பாள் உபாஸகர். விவேகானந்தர் துறவியாக இருந்தாலும்கூட தமது குருவின் வழியில் அம்பாள் உபாஸகராக இருந்தவர்தான்.

மகாகவி பாரதி பாடுகிறார் - அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்.

எல்லா ஸ்வாமிகளும் வர ஹஸ்

தத்துடன்தான் (அருள் புரியும் கை) காட்சியளிக்கிறார்கள். எல்லா தெய்வங்களிடமும் போய் வரம் கேட்கலாம்... ஆனால் அம்பாள்கிட்டே கேட்டால் கொஞ்சம் கூடுதலாகக் கிடைக்கும். அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்!

## அன்பு கனிந்த கனிவு!

தம்மை சக்திதாஸன் என்று



அழைத்துக்கொண்டு, தம்முடைய பெயரே பராசக்தியின் பெயராக இருக்க வேண்டும் என்பதற்காக, பராசக்தியிடம் தமக்கு வேண்டியதையெல்லாம் கேட்டவர் பாரதி. ஏதாவது ஒன்று வேண்டுமானால் பராசக்தியிடம் தான் கேட்பார். எனக்கு வீடு வேண்டும், காணி நிலம் வேண்டும்... எது வேண்டுமென்றாலும் பராசக்தி - சாக்ஷாத் பராசக்தியிடம்தான் கேட்கிறார். நீதான் எல்லாம். "அன்பு கனிந்த கனிவே சக்தி" என்று பராசக்திக்கு ஒரு definition கொடுக்கிறார் பாரதியார்.

அன்பை அப்படியே ஓர் உருவமாக வைத்தால், அந்த உருவம் யார் என்றால் சக்தி - பரமேசுவரி வடிவம். அப்படி அம்பாள் உபாஸகர்களாக இருக்கக்கூடியவர்கள் எல்லா விதமான நன்மைகளையும் பெறுவார்கள் என்பதை நிதர்சனமாகக் காட்டக்கூடிய கிரந்தம்தான் லலிதா சஹஸ்ரநாமம்.

இந்த சஹஸ்ரநாமத்துக்கு பாஸ்கர ராயர் கொடுத்த வியாக்யானம் மிகச் சிறந்த வியாக்யானமாகக் கருதப்படுகிறது. அதற்கு முன்னாலும் பின்னாலும் பல வியாக்யானங்கள் வந்தன.

ஆயிரம் நாமங்களைக் கொண்டு அம்பாளைப் பூஜிக்கக்கூடிய முறைதான் சஹஸ்ரநாமம்.

சஹஸ்ரநாமத்தில் திருநாமங்கள் எல்லாம் எப்படி அமைந்திருக்கின்றன...?

கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள் என்று ஒருத்தர் இருந்தார். மனோன் மணியம் சுந்தரனார் என்று சொல்கிறோமே - 'நீராரும் கடலுடுத்த' என்று தமிழ்த் தாய் வாழ்த்தை இயற்றி, அதைத் தமது மனோன்மணீயம் காப்பியத்தில் வைத்தவர் மனோன் மணீயம் சுந்தரனார். நெல்லைப் பகுதியில் பல்கலைக்கழகத்துக்கு அவர் பெயரைத்தான் வைத்தார்கள். அந்த மனோன்மணீயம் சுந்தரனாருக்கு குருவாக இருந்தவர் கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள்.

லலிதா அனுபூதி என்ற கிரந்தத்தைச் செய்திருக்கிறார் இந்த சுந்தர சுவாமிகள். இவர் ஒரு பெரிய வித்யா உபாஸகர். லலிதாம்பிகையின் அனுபூதியை அனுபவித்து அவர் சொல்லும்போது ஒரு விஷயம் சொன்னார். இந்த ஸஹஸ்ரநாமத்திலுள்ள ஆயிரம் நாமங்களும் எப்படி அமைந்திருக்கின்றன என்று சொன்னார். அந்த விவரம்...

(தொடரும்)

# இனம் புரியாத பயம்!



"வர்ற 15-ஆம் தேதி முகூர்த்தத்தில் உங்க கல்யாணத்தை வச்சுக்கலாம்னு சொன்னா ஏன் வேண்டாங்கறீங்க?"

"அன்னைக்குத்தான் என் பிறந்த நாள். அப்புறம் ஆயுசுக்கும் என் பிறந்த நாளை சந்தோஷமா கொண்டாட முடியாதபடி ஆயிடுமே.."

- கே. ஆனந்தன்





"கொளுத்தும் வெயில்ல வர்றீங்களே... சூடு தெரியலையா சார்?"

"குளுகுளுன்னு இருக்குது சார்... இப்பத்தான் பொண்டாட்டிய அம்மா வீட்டுக்கு பஸ் ஏத்திவிட்டுட்டு வர்றேன்!"

- கிரிஜா மணாளன்

"உனக்குக் கண்டம் இருக்கு!"

"நான் நம்ப மாட்டேங்க! எனக்குச் சொந்தமா வீடே இல்லை... அப்புறம் எப்படிக் கண்டம் இருக்கும்?"

- சி.பரத்




"டாக்டர், அடிக்கடி என் மனசுல ஒரு இனம் புரியாத பயம் ஏற்படுது."
"இதுல என்ன பயம் வேண்டி கிடக்கு... நீங்க மனித இனம்தான்!"
- சி.சண்முகம்


"மோகனா, ஊர்ல இருந்து உங்கம்மா, அப்பா எல்லாரும் வரப் போறாங்க!"
"போன் பண்ணிச் சொன்னாங்களா?"
"ம்ஹூம்... டி.வி ராசிபலன்ல 'தண்டச் செலவுகள் தேடி வந்து தொல்லை கொடுக்கும்'னு சொன்னானே!"
- சி.பி.செந்தில் குமார்


"இருபத்திநாலு மணி நேரமும் உன் வீட்டுக்காரர் உழைச்சு சம்பாதிக்கிறாரா... எப்படி?"
"பகலெல்லாம் ஆபீஸ்ல நல்லா தூங்கிடுவாரு... ராத்திரி அந்த ஆபீஸ்லயே நைட் வாட்ச்மேன் வேலை செய்வாரு!"
- சி. பரத்

எழுத்தாளனும், பதிப்பாளனும் இருசக்கர வாகனம் போல. சில நேரம் பதிப்பு முன்சக்கரமாகவும், சில நேரம் எழுத்து முன் சக்கரமாகவும் இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் உள்ளது. ஒன்று இல்லையென்றாலும் வண்டி, சர்க்கஸ் வண்டிதான். ராயல்டி தராமல் ஏமாற்று கிற பதிப்பாளர் ஒற்றைச் சக்கர வண்டி ஓட்டுபவர். எல்லா பதிப்பாளர்களும் ஏமாற்றுபவர்கள் அல்லர். அதே சமயம் எல்லோரும் முழுதாக ராயல்டி தரும் பதிப்பாளர்கள் என்றும் சொல்ல முடியாது.

எழுத்தாளனின் குழந்தை எழுத்து. பதிப்பாளனின் வெளியீடும் குழந்தைதான். இவ்விருவரில் யார் துரோகமிழைத்தாலும் பாதிப்பு குழந்தையாகிய படைப்புக்குத்தான்.

சில எழுத்தாளர்கள், தங்கள் எழுத்தின் மீது பெரிய அளவில் நம்பிக்கை வைத்து, பெரிய அளவுக்கு விற்கிறது என்ற நினைப்பில் இருந்து விடுகிறார்கள். நடைமுறை இதற்கு மாறாக அமையவே, அங்கே பிரச்னை உருவாகிறது. விற்பனையைப் பற்றி அறியாமல் பேசும் எழுத்தாளர் தான் ஏமாற்றப்படுவதாகவே நினைப்பார்.

ஒரு படைப்பு நன்றாக விற்பனையாவதைப் பதிப்பாளரால் தடுக்கவும் முடியாது; மறைக்கவும் முடியாது. 10%, 15% ராயல்டி ஏன் ஏமாற்றப்பட வேண்டும்? பரஸ்பர ஒற்றுமை இருந்தால் இதுபோன்ற பிரச்னைகளுக்கு வழியே இல்லை.

ஓர் இளம் எழுத்தாளர், மிகவும் படித்தவர், பரவலாகப் பேசப்படக்கூடிய பேச்சாளர். அவர் ஒரு இரண்டாம் தலைமுறை பதிப்பாளரிடமிருந்து தமது நூல்களையெல்லாம் வாங்கிக்கொண்டு வெளியேற வேண்டிய சூழல் ஏற்பட்டது. இதற்கு என்ன காரணம்? பதிப்பாளர், எழுத்தாளர்களுக்கிடையே புரிதல் இல்லை.

எனது தந்தையார் காலத்தில் பாரதி பதிப்பகம் அமரர் சிதம்பரம் செட்டியார், கண்ணதாசனின் புத்தகம்

# எழுத்தாளனை வஞ்சிக்கின்றனவா பதிப்பகங்கள்?

## இலக்கியம்

எதையும் வெளியிடவில்லை. ஆனால் கண்ணதாசன் சாலையில் இருக்கும் வீடு, அவரது முயற்சியால் வாங்கப்பட்டது அவர் முயற்சி எடுத்திருக்காவிட்டால் கவிஞர் நிச்சயம் வாங்கியிருக்க மாட்டார். ஓர் எழுத்தாளன் தன்னுடைய பணத்தை வீணடிக்கக் கூடாது என்ற பதிப்பாளரின் எண்ணத்தைத்தானே இது காட்டுகிறது. எழுத்தாளர் என்னும் சுவர் இல்லாமல் பதிப்பாளர் எப்படிச் சித்திரம் வரைய முடியும்?

எழுத்தாளரும் ஒரு விஷயத்தை நன்கு புரிந்துகொள்ள வேண்டும். வீடோடு முடிந்து போகிற தமது எழுத்துப் பணியை வீடு வீடாய், ஊர் ஊராய், மாநிலம் முழுதுமாய், மாநிலத்துக்கு அப்பால் எடுத்துச் செல்கிறவன் பதிப்பாளன். ஒரு காலத்துக்குப் பின் எழுதப்படுவதையெல்லாம் வாங்க வாசகன் தயாராகவே இல்லை. தனக்கென்ன விஷயம் இதில் இருக்கும் என்ற சமூக, வாசக எதிர்பார்ப்பு கூடியுள்ளது.

எழுத்தாளர் எழுத்தை எழுத்தாகப் பார்க்காமல், பணமாகப் பார்த்தால் மரியாதை இழப்பு ஏற்படுவது உறுதி.

டாக்டர் மு.வ. அவர்களுக்கும் பாரி நிலையத்தாருக்கும், கல்கி அவர்களுக்கும் வானதி பதிப்பகத்துக்கும் இருந்த உறவைப் போன்று தலைமுறை தாண்டி வரும் உறவுகள், தமிழையும் தமிழ்ப் பதிப்பகச் சூழலையும் வளப்படுத்தும்.

ஒருமுறை கல்கி ராஜேந்திரன் கூட்டமொன்றில் குறிப்பிட்டார்... "ஒவ்வொரு முறையும் பொன்னியின் செல்வன் அச்சடிக்கப்பட்ட உடனேயே வானதி திருநாவுக்கரசு அதற்கான ராயல்டியை அனுப்பி விடுவார். அது எப்படி என்று எங்களுக்கே ஆச்சரியமாக இருக்கும்."

இத்தகைய உறவு, அக்கறை, புரிந்து கொள்ளும் பாங்கு, எழுத்தாளனுக்கும் பதிப்பாளனுக்கும் வந்துவிட்டால், வஞ்சிக்கப்படுவது என்ற வார்த்தைக்கே இடமில்லை.

- ஆதித்யா

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

# காந்தி கண்ணதாசன்



* 'ஈ' படத்தில்...

## விருது கிடைக்குமா?

ஜீவாவுக்கு இது பொற்காலம். அமீரின் 'ராம்' படத்தில் ஆரம்பித்து, தீபாவளிக்குத் திரைக்கு வரவிருக்கும் 'ஈ' வரை எல்லாமே அவருக்கு வித்தியாசமான வேடங்கள்தான். அதிலும் 'ஈ', 'இயற்கை' ஜனநாதன் இயக்கத்தில் பிரம்மாண்டமாக வந்திருக்கிறதாம். 'ஏன் 'ஈ' என்று பெயர் வைத்தீர்கள்?' என்றால், "'ஈ' என்றால் ஈஸ்வர். ஆனால் அவனுக்கே அது தெரியாது. தனது பெயரை 'ஈ' என்றுதான் கையெழுத்திடுவான். அப்படியொரு வித்தியாசமானவன். யாருக்குமே பிடிக்காத, அருவருப்பான கேரக்டர் அவனுடையது. ஏன் அவன் அப்படி ஆனான்? எப்படி அவன் ஹீரோவாகிறான் என்பதுதான் ஈயின் அழகான திரைக்கதை" என்கிறார் ஜனநாதன்.

இப்படத்தின் தயாரிப்பாளர் ஆர்.பி. சௌத்ரி, ஜீவாவின் அப்பா.

'எனில் ஜீவா ரொம்ப சுதந்திரம் எடுத்துக் கொண்டாரா?' என்றால் ஒரேயடியாக மறுக்கிறார் ஜனநாதன்.

"ஜீவா தயாரிப்பாளரின் மகன் போல் என்றுமே என்னிடம் நடந்து கொண்டதில்லை. ஒரு சாதாரண மனிதனாக நடக்கும் அவரிடம் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் ஏராளம்!"

'இயற்கை போல் 'ஈ'க்கும் தேசிய விருது கிடைக்குமா?' என்றால், "விருதை குறிவைத்து நான் படமெடுப்பதில்லை. கிடைத்தால் மகிழ்ச்சி" என்கிறார் ஜனநாதன்.

- கல்பனா

**இதுவரை...**

பாமா - கௌரிசங்கர் நிச்சய தார்த்தம் ஆனந்தாயின் முயற்சிகளையும் மீறி முடிந்துவிடுகிறது. டென்ஷனாகிற ஆனந்தாயி, பாமாவை அவளது ஆபீஸில் சந்தித்து நியாயம் கேட்கிறாள். 'இப் போதும் ஒன்றும் கெட்டுவிடவில்லை. ராதாவை டைவர்ஸ் பண்ணிவிட்டு வரச் சொல். மணமேடையில் இருந்தாலும் நான் அப்படியே ஷ்யாமோடு வரத் தயார்' என்கிறாள் பாமா.

பாமா சொன்னதைப் பற்றி ஷ்யா மோடு விவாதிக்கிறாள் ஆனந்தாயி. அவர்களின் கல்யாணம் நடப்பதற்காகத் தாம் ராதாவைக் கொன்றுவிட்டு ஜெயிலுக்குப் போகவும் தயார் என்று அவள் பேச, ஷ்யாம் அதிர்கிறான்.

கார்த்திக் தம் கனவில் அஸ்வினி வந்ததாகச் சொல்ல, கீதா தவித்துப் போய் கோபப்படுகிறாள். 'அவளை மறந்துவிடு' என்கிறாள். கண்காட்சி ஒன்றுக்காக வெளிநாடு சென்றிருந்த சந்திரசேகர், ஊரிலிருந்து திரும்பி வருகையில் அஸ்வினியுடன் வர, கீதா ஷாக்காகி சண்டை போடுகிறாள். 'அஸ்வினி இனி இங்குதான் இருப்பாள்' என்று சந்திர சேகரும் கோபமாகப் பேசுகிறான். அடி யாட்கள் மூலமாக அஸ்வினியை விரட்ட கீதா முயற்சி செய்ததையும் மிகக் கடுமை யாகக் கண்டித்து, கீதாவை அடித்தும் விடுகிறான். கீதாவின் ஆவேசம் அடங்க வில்லை. வீட்டை விட்டு வெளியே போகுமாறு அஸ்வினியை மிரட்டுகிறாள். அஸ்வினியின் கெஞ்சல்கள் எதுவும் கீதாவிடம் எடுபடாமல் போகின்றன.

அஸ்வினியை விரட்ட தான் கொடுத்த அசைன்மென்டை அருண் சரியாக முடிக்கவில்லையென்று, கொடுத்த பணத்தைத் திரும்பக் கேட்கிறாள் கீதா. அதிர்ந்த அருண், கார்த்திக் அவள் பிள்ளை இல்லையென்ற உண்மையைச் சொல்லிவிடுவதாக மிரட்டுகிறான். கீதா மன்னிப்பு கேட்டுவிட்டு அங்கிருந்து கிளம்புகிறாள்.

தமது முகூர்த்த புடைவையை ராதா பூஜையறையில் வைக்க, ஆனந்தாயி பிள்ளையில்லாதவள் என்று அவளைக் கிண்டலடிக்கிறாள். பூங்கொடி தமது குறிக்கோளுக்கு இடையூறாக இருப்பதை உணர்ந்த யாமினி, அவளிடம் நல்ல விதமாகப் பேசி, நம்பிக்கையை ஏற் படுத்திக் கொள்கிறாள்.

யாமினி கொடுத்த ஐடியாவை நம்பிய பூங்கொடி, ஆனந்திடம் நெருங்கிப் பழக, அவனுக்கு அது எரிச்சலை ஏற்படுத்து கிறது. பாமாவால் அவமானப்பட்ட ஷ்யாம், அவன் கொடுத்த வீட்டைவிட்டு வெளியேறும் எண்ணத்துக்கு வர, அது ராதாவுக்கு அதிர்ச்சியை உண்டாக்கு கிறது.

**இனி...**

ஷ்யாம் தமது திருமண நாளுக்காக பட்டுவேட்டி, சட்டை சகிதம் வர, ராதாவுக்கு அதைப் பற்றிய நினைப்பே இல்லாமல் இருக்க, ஷ்யாம் அவளைக் கடிந்துகொள்ள, சுஜி இடையில் புகுந்து இருவரையும் சமாதானப்படுத்தி கோயிலுக்கு அனுப்பி வைக்கிறாள்.

இருவரின் திருமண நாள் பற்றி ராதா பாமாவுக்குத் தெரியப்படுத்த, அவள் கௌரிசங்கரோடு விருந்துக்கு ராதா வீட்டுக்கு வர, ஷ்யாம் அவர்களைத் தவிர்க்க முடியாமல் விருந்தில் கலந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற் படுகிறது. பாமா விருந்தின்போது கௌரி சங்கருடன் நெருக்கமாக இருந்து ஷ்யாமை வெறுப்பேற்றுகிறாள்.

அருணின் பிள்ளைகள் டூர் செல்வ தற்காகப் பணம் கேட்க, பணம் கொடுக்க முடியாத ஏக்கத்தில் அருண் துடிக்க, அப்போது சக புரோக்கர் ஒருவன் வந்து விஷயத்தைக் கேட்டறிகிறான். பின்னர் தவறான யோசனை ஒன்றைச் சொல்லி

நடித்து, ஒரு பார்ட்டிக்கு அருணின் வீட்டையே விலை பேசி அட்வான்ஸ் வாங்கிக் கொடுக்க, அருண் அதிர்கிறான்.

ஒரு டெண்டர் விஷயமாக பாமா விடம் ஷ்யாம் பேச, பாமா அவனை உதாசீனப்படுத்துகிறாள். அந்த வருத்தத் தோடு வீட்டுக்கு வந்த ஷ்யாம், ராதா விடம் தான் ஒரு முடிவு எடுத்து விட்டதாகக் கூற, அவள் அதிர்கிறாள்.

ஷ்யாம் என்ன முடிவு எடுத் தான்?

வரும் எபிஸோடுகளில்...

# தவிப் 4... துடிப் 4... நடிப் 4...!



சகபுரோக்கர் அருணி டம் சில நாட்களில் பார்ட்டியிடம் பணத் தைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, ‘வீட்டை தற்போது விற்கவில்லையென்று சொல்லிவிடலாம்’ என்று கூறி சமாதானப்படுத்து கிறான். அருண் தான் வாங்கிய பணத்தை பிள் ளைகளிடம் ஊருக்குக் கொடுக்க, கவிதா ஏது பணம் என்று கேட்க, உழைத்துச் சம் பாதித்தது என்று பொய் சொல்கிறான்.

அஸ்வினி, கார்த்திக்கிடம் பரிவாகப் பழகுவதை கண்ட கீதா, அவனை அழைத்து அஸ்வினியோடு பழகக் கூடாதென்று சொல்கிறாள். இதைக் கவனித்த சந்தரசேகர், கீதாவிடம் அஸ்வினி இதுவரை தம்மைத் தாய் என்று காட்டிக் கொள்ளாமல் பழகுவதைச் சொல்லி, அவளுக்கு சப்போர்ட்டாகப் பேச, இருவருக்கும் சண்டை உண்டா கிறது.

**கண்ணாடி கதவுகள் விமர்சனப் போட்டியில் பங்கேற்ற ஆயிரக்கணக்கான வாசகர்களில், சிறப்பான விமர்சனம் எழுதி பரிசு பெறும் முதல் மூன்று பேர்:**

1. எஸ். மீனா, ஸ்ரீரங்கம்,
2. எஸ். சண்முகம், திருவண்ணாமலை
3. சரஸ்வதி இராசேந்திரன், மன்னார்குடி

வெற்றி பெற்ற அனைவருக்கும் வாழ்த்துகள்.

# உள்ளாட்சித் தேர்தலின் ஹீரோ!

இப்போதுதான் முடிந்த மாதிரி இருக்கிறது சட்டமன்றத் தேர்தல். இதோ உள்ளாட்சித் தேர்தல் பக்கத்தில் கண்சிமிட்டிக் காத்திருக்கிறது. மாநிலத் தேர்தல் ஆணையத்தால் நடத்தப்படவுள்ள இந்தத் தேர்தலின் ஹீரோ, மாநிலத் தேர்தல் ஆணையர் சந்திரசேகரன் ஐ.ஏ.எஸ்.

இவர் பழைய வட ஆற்காடு மாவட்டத்துக்காரர். அப்பா, இந்திய ராணுவத்தில் சுபேதாராகப் பணியாற்றியவர். வேலூர் ஊரிஸ் கல்லூரியில் பி.ஏ. பொருளாதாரம்; சென்னை பச்சையப்பனில் எம்.ஏ.

'உள்ளாட்சித் தேர்தலில் மின்னணு வாக்குப்பதிவு இயந்திரங்களுக்குப் பதிலாக பழைய வாக்குப் பெட்டிகளையே பயன்படுத்த முடிவு செய்யப்பட்டுள்ளதற்கு என்ன காரணம்?' என்றால்,

"சட்டமன்ற அல்லது பாராளுமன்றத் தேர்தல் எனில், வாக்காளர்கள் ஒரே ஒரு வோட்டுப் போட்டு தங்கள் பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து விடுவார்கள். அதற்கு வாக்குச் சாவடிக்கு ஒரு மின்னணு வாக்குப்பதிவு இயந்திரம் போதும். ஆனால், உள்ளாட்சித் தேர்தலில், ஒவ்வொரு கிராமப்புற வாக்காளரும், வார்டு உறுப்பினர், கிராமப் பஞ்சாயத்துத் தலைவர்; பஞ்சாயத்து யூனியன் வார்டு உறுப்பினர், மாவட்ட பஞ்சாயத்து வார்டு உறுப்பினர் என்று நான்கு பேரைத் தேர்ந்தெடுக்க, நான்கு வாக்குகள் அளிக்க வேண்டும். இதே போலத்தான் நகர்ப்புற வாக்காளர்களுக்கும். இதற்கு சட்டமன்றத் தேர்தலில் பயன்படுத்தப்பட்டதைப்போல நான்கு மடங்கு எண்ணிக்கையில் மின்னணு இயந்திரங்கள் தேவை. புதிய மின்னணு இயந்திரங்கள் வாங்கப் போனால், சென்னை மாநகராட்சி தேர்தலுக்கு மட்டும் 55 கோடி செலவாகும். இல்லையெனில், அண்டை மாநிலங்களிலிருந்து இயந்திரங்களை இரவல் வாங்க வேண்டும். வரும் அக்டோபர் 24ஆம் தேதியுடன் பஞ்சாயத்துகளில், தற்போது பதவியில் உள்ளவர்களின் பதவிக் காலம் முடிகிறது. அதற்குள் உள்ளாட்சித் தேர்தல்களை நடத்தி முடிக்க வேண்டும். எனவேதான், வாக்குப் பெட்டிகளையே பயன்படுத்த முடிவு செய்யப்பட்டுள்ளது. இப்படி வாக்குப் பெட்டிகளைப் பயன்படுத்துவதால், மொத்த செலவே இருபது கோடிக்குள் அடங்கிவிடும்" என்கிறார்.

• சந்திரசேகரன்

'மக்களாட்சி தத்துவத்தையே கேலிக்குரியதாக்கும்விதமாக பாப்பாபட்டி, கீரிப்பட்டி போன்ற சில கிராமங்களில் நிலவும் அவலத்தைப் போக்கி, உண்மையான ஜனநாயகம் மலர என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?'

"குதிரையைத் தண்ணீருக்கு அருகில் அழைத்துச் செல்லலாமே ஒழிய, அதைத் தண்ணீர் குடிக்க வைப்பது சாத்தியமில்லை. தேர்தல் ஆணையம் விதிகளின்படி தேர்தலை நடத்தலாம். அங்கே உண்மையில் ஜனநாயகம் மலரச் செய்வது மக்கள் கையில்தான் இருக்கிறது. இருந்தாலும், அங்கும் மற்ற பகுதிகள் போல பஞ்சாயத்து ராஜ்யம் மலர உரிய நடவடிக்கைகளை தேர்தல் ஆணையம் எடுக்கும்."

- எஸ். சந்திரமௌலி

படம் : ஸ்ரீஹரி

'குலதெய்வம் ராஜகோபால்' பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது 'குலதெய்வம்' யாரென்று நான் கேட்க,

"அந்தக் காலத்துல, 'குலதெய்வம்'னு ஒரு படம் வந்தது தம்பி, அதுல நடிச்ச நம்ம ராஜகோபால், அந்தப் படம் வெற்றி அடைஞ்சதால தம் பேரோட அதைச் சேர்த்து 'குலதெய்வம் ராஜகோபால்'னு வச்சுக்கிட்டாரு" என்றார் முத்துராக்கு.

பொதுவாக நகைச்சுவையான செய்திகள், படங்கள் என்றால் விடிய விடியப் பேசிக்கொண்டே இருப்போம். ஏவி.எம். தயாரித்த 'சபாபதி' பற்றிப் பேச்செடுத்தால் போதும்... முத்துராக்கு அன்ன ஆகாரமின்றிப் பேசிக் காண்பித்து கூட்டத்தையே சிரிக்க வைத்துக் கொண்டிருப்பார்.

'நகைச்சுவைப் படங்கள் எடுக்கிறதுனால என்ன லாபம்?' என்று நான் ஒரு நாள் கேட்டு வைக்க, முத்துராக்கும், சினிமா மணியும் சேர்ந்து ஒரு 'மெகா' சொற்பொழிவே நிகழ்த்திவிட்டார்கள்.

"தம்பி, தரமான நகைச்சுவைப் படமெடுத்தால் தோல்வி அடையாது. போட்ட பணமும் வரும்; அதுக்கு மேலும் வரும். அது மட்டுமல்ல, எல்லா வயதினரையும் சிரிக்க வைக்கிறது ஒரு புண்ணியம் தம்பி. 'கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி', 'கடன் வாங்கிக் கல்யாணம்', 'மிஸ்ஸியம்மா', 'மாயாபஜார்' இந்தப் படங்கள்ல வர்ற காட்சி மட்டுமில்ல, பாடல்களுமே நகைச்சுவையா இருக்கும். மாயாபஜார்ல 'கல்யாண சமையல் சாதம்' பாட்டுல ரங்காராவ் பாடிக்கொண்டே சாப்பிடும் மந்திர தந்திரக் காட்சிக்கு ஈடு இணையேது தம்பி?" என்று முத்துராக்கு கூற,

"கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி' படத்துல கதாநாயகன் டி.ஆர். ராமச்சந்திரன்; அவரு தோழன் நம்ம நடிகர் திலகம்தான். அதுல சிவாஜிக்குப் பின்னணி நம்ம சந்திரபாபு பாடியிருக்கார்னா பாத்துக்கோயேன்" என்றான் மணி.

" 'சபாஷ் மீனா' படமும், 'அடுத்த வீட்டுப்பெண்' படமும் முழு நீள நகைச்சுவைப் படங்கள்தான். 'சபாஷ் மீனா' படத்துல சந்திரபாபு நடிக்க (இரட்டை வேடம்), அவருக்கே ஒருத்தர் பின்னணி பாடியிருக்கார் தெரியுமா?" என்று நிறுத்திய முத்துராக்கு, "வேற யாருமில்லை, சீர்காழி கோவிந்தராஜன்தான். 'ஆசைக் கிளியே கோபமா உங்கப்பா மனசு மாறுமா'ன்னு டி.எம்.சௌந்தர்ராஜனோடு சேர்ந்து பாடியிருப்பார்" என்று சொல்ல, பேச்சு சுவாரஸ்யத்தில் அடுத்த ஊருக்கே வந்தது அப்புறம்தான் தெரிந்தது. பிறகு, ஒரு மாட்டு வண்டியில் ஏறி விடாமல் பேசிக்கொண்டே நள்ளிரவு வீடுவந்து சேர்ந்தோம்.

இன்றைக்கும்கூட நகைச்சுவைப் படமென்றால் முதல் நாள் போகிற பழக்கம் விடவில்லை எனக்கு. முக்தா சீனிவாசன் படங்களில் 'சோ' வசனம் எழுதி வெளிவந்த 'தேன்மழை', 'நினைவில் நின்றவள்' 'ஆயிரம் பொய்' 'பொம்மலாட்டம்' போன்ற படங்களும், பிற்காலத்தில் இயக்குநர் பாக்யராஜின் 'இன்று போய் நாளை வா' போன்ற படங்களும் இப்போது தொலைக்காட்சியில் போட்டாலும் குடும்பத்தோடு பார்த்துச் சிரித்துக்கொண்டே இருக்கலாம்.

இந்த வரிசையில் தனக்கென ஓர் இடத்தைப் பிடித்து, அதை இன்றைக்கும் தக்க வைத்துக் கொண்டிருப்பவர் நடிகர், இயக்குநர் ஆர்.பாண்டியராஜன். தன்னுடைய முதல் படமான 'கன்னி



ராசி'யில் தொடங்கி பிறகு தானே நடித்து இயக்கிய 'ஆண்பாவம்' படத்தை மிகப் பெரிய வெற்றிப் படமாக்கியவர் பாண்டியராஜன்.

அவருடைய நட்பும் எனக்கு மேடையில்தான் கிடைத்தது. கோவையில் நடைபெற்ற ஓர் இலக்கிய விழாவில் நண்பர் மரபின்மைந்தன் முத்தையா மூலம் அறிமுகமானார் பாண்டியராஜன். இன்றைக்கும் அந்த நட்பு, குடும்ப உறவு போல் தொடர்ந்து வருகிறது.



# விருமாண்டி தந்த தைரியம்!

நான் அவரிடத்தில் அடிக்கடி சொல்வதுண்டு. 'நம்முடைய தொலைக்காட்சிகளில் பாரபட்சமில்லாமல் வாரத்தில் ஏழு நாளும் உங்கள் படம் ஓடிக்கொண்டிருப்பதை நான் பார்த்து ஆச்சரியப்படுவதுண்டு'' என்றவுடன், 'அதுக்குக் காரணம், கள்ளம் கபடமில்லாத குழந்தைகளைக் கூட சிரிக்க வைக்க வேண்டும் என்று நான் நினைப்பதுதான்' என்று சொல்வார் பாண்டியராஜன்.

சமீபத்தில் தன்னுடைய இரண்டாவது மகனான பிரித்விராஜனை (ப்ரீத்தி) கதாநாயகனாக்கி அவரும் நடித்து இயக்கிய படம் கைவந்த கலை. அந்தப் படத்தின் வெளிப்புறப் படப்பிடிப்புக்காக நாகர்கோவில் செல்லும்போது மதுரையில் எங்களுடைய புதிய வீட்டுக்கு மத்தியான விருந்துக்குப் படப்பிடிப்புக் குழுவினரோடு வந்தார். ஒரு நாள் திடீரென்று தொலைபேசியில் தொடர்பு கொண்டு, கைவந்தகலை படத்தில் நடிப்பதற்கு என்னை அழைத்தார்.

'விருமாண்டி' 'இதயத் திருடன்' படங்களில் நடித்த அனுபவம் கொடுத்த தைரியத்தில் நான் சென்னைக்குச் சென்றேன்.



விருகம்பாக்கத்தில் ஒரு பங்களாவில் படப்பிடிப்புத் தொடங்கியது. பாண்டியராஜன், நான் நடிக்க வேண்டிய காட்சியை விளக்கிச் சொன்னார்.

ஒரு பெரியவர் இறந்து போக, துக்கம் கேட்டு வருகிறவர்களிடத்தில் அவர் எப்படி இறந்தார் என்பதை நீட்டி முழக்கிக் கிராமத்துப் பாணியில் சொல்கிற வேலை எனக்கு.

கு.ஞானசம்பந்தன்

'எப்படி இறந்தாருன்னு ஒருத்தர் உங்ககிட்ட கேட்பார். நீங்க உடனே ஆரம்பிக்கணும்' என்று வசனத்தைப் படித்துக் காண்பித்தார்.

'காலையில நல்லாத்தான்ப்பா எந்திரிச்சு வாங்கிங் போயிட்டு...' என்று மத்யானம் வரைக்கும் நடந்ததைச் சொல்லி, ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்கு கார்ல வந்து நாங்க இறங்கறோம்... அவரு...' என்று சொல்லி சைகையில் இறந்துட்டார் என்று முடிக்கவும், துக்கம் கேட்க வரிசையில் நிற்கும் அடுத்தவர் என்னிடம் வந்து 'எப்படி இறந்தாரு' என்று கேட்பார். நான் மறுபடி அதே வசனத்தைத் தொடங்க, பாண்டியராஜனும், கதாநாயகன் ப்ரீத்தியும் எனக்குத் தெரியாமல் நான் பேசியதை டேப்பில் பதிவுசெய்து என்னிடம் கொடுக்க, துக்கம் கேட்க வந்தவர்களுக்கு அந்த டேப்ரிக்கார்டரை நான் போட்டுவிட்டு, காபி குடிக்க உட்கார்ந்துவிடுவேன்.

படப்பிடிப்புத் தளத்தில் அவர், 'இப்படித்தான் நடிக்க வேண்டும்' என்று சொல்லிக் கொடுக்கவில்லையே என்று யோசித்துக் கொண்டிருந்தேன். ஆனால் படம் வந்தபிறகு சொன்னார் : 'பார்த்தீங்களா? வசனத்தை உங்க இயல் புல பேசணும்னுதான் நான் ஒண்ணும் உங்களுக்குச் சொல்லிக் குடுக்கல. அந்த இயல்பான உச்சரிப்பும் நடிப்பும்தான் எந்த நடிகருக்கும் வெற்றியைக் கொடுக்கும்'.

பாண்டியராஜனின் வெற்றிக்கான ரகசியங்களில் இதுவும் ஒன்று.

இந்த ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஜெயா டி.வி. படப்பிடிப்பில், நான் பேசி வருகின்ற 'காலை மலர்' 'இன்றைய சிந்தனை' நிகழ்ச்சியில் இருந்தபோது, என் துணைவியார் அமுதா சம்பந்தன், என்னை அவசரமாகத் தொலைபேசியில் அழைத்து 'உங்களைப் பற்றி ஜெயா டீ.வி.யில் சொல்கிறார்கள் பாருங்கள்' என்றார்.

நான் டீ.வி. படப்பிடிப்புத் தளத்தில் இருந்த டீ.வி.க்கு முன்னே போய் நின்றேன். அதில்...

(ரீல் சுற்றும்)



ஸ்ரீ கலங்காமற் காத்த விநாயகர் துணை

# அருள்மிகு ஆபத்சகாயேஸ்வரர் திருக்கோயில்

ஆலங்குடி - 612 801 வலங்கைமான் வட்டம் திருவாரூர் மாவட்டம்

## 1416 ம் பசலி குருபெயர்ச்சி இலட்சார்ச்சனை விழா

குருபெயர்ச்சி நாள் : **20.10.2006** இரவு. தற்போது உள்ள ராசி : துலாம்

20.10.2006ல் பிரவேசிக்கும் ராசி : விருச்சிகம்

பரிகாரம் செய்து கொள்ள வேண்டிய ராசிகள் : மேஷம், மிதுனம், சிம்மம், கன்னி, விருச்சிகம், தனுசு, கும்பம்

இலட்சார்ச்சனை நாள்: **05.10.2006** முதல் **12.10.2006** முடிய
**26.10.2006** முதல் **05.11.2006** முடிய

கட்டணம்: நேரடி - ரூ. **125/-** தபால் - ரூ. **150/-**

அருள்மிகு குருபகவான் உருவம் பொறித்த 2 கிராம் வெள்ளியினால் செய்த டாலர் பிரசாதமாக வழங்கப்படும்.
தொகையை மணியார்டர் மூலமாகவோ, டிமாண்ட் டிராப்டாகவோ,
நிர்வாக அதிகாரி, அருள்மிகு ஆபத்சகாயேஸ்வரசுவாமி திருக்கோயில், ஆலங்குடி - 612 801,
வலங்கைமான் வட்டம், திருவாரூர் மாவட்டம் என்ற முகவரிக்கு அனுப்பவும்.

டிமாண்ட் டிராப்ட் எடுப்போர் கும்பகோணம் வங்கி கிளையில் மாற்றத்தக்க வகையில் அல்லது சிட்டி யூனியன் வங்கி, ஆலங்குடி - 612 801, திருவாரூர் மாவட்டம் என்ற முகவரிக்கு எடுத்து அனுப்பவும் அல்லது ICICI கணக்கு எண் 608101081328ல் கட்டணத்தை செலுத்தி கட்டணம் செலுத்திய செலானை கடிதத்துடன் இணைத்து அனுப்பவும்.

மேலும் விபரங்களுக்கு www.tiruvarur.tn.nic.in மற்றும் www.alangudigurubaghavan.org என்ற இணையதளத்தில் பார்த்து தெரிந்து கொள்ளவும்.

இங்ஙனம்

பொன்.நந்தகோபால் M.A.,
செயல் அலுவலர்

அ. இளம்பரிதி B.Sc., M.A.,BL.,
தக்கார்/உதவி ஆணையர்

குறிப்பு: தபாலில் இலட்சார்ச்சனை பிரசாதமாக சிறிய லாடு, விபூதி, குங்குமம், வெள்ளி டாலர் ஆகியவை கொண்ட பெட்டி Speed Post மூலம் அனுப்பி வைக்கப்படும்.



# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"
29-30 கிழக்கு ஐய்யன் தெரு, கும்பகோணம் - 612 001.
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocilies.com/gdpskmu

☎ Off :
(0435) 5532239
Fax : 2425948
Patasala :
5532238, 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்கியமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் முதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 463 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜ வேத காவ்ய பாடசாலையை வேதபடி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டடம் ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம் என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்கள்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (முழுத் தொகை) | Rs. 500 | Rs. 8,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

எண்ணி எண்ணிப் பார்த்து மனம் இன்பம் கொண்டாடியது. எதிர்பார்த்ததைவிட போட்டோ மிக அழகாக உயிரோட்டத்துடன் வந்திருந்தது. இதை எடுத்து முடிப்பதற்குள் சுமன் பட்டபாடு...

எடிட்டர் நல்லவர்தான். ஆனால் அவ்வப்போது மேலே விழுந்து பிராண்டுவார். அவர்களுடையது பேர் பெற்ற ஆங்கில தினசரிப் பத்திரிகையின் இலவச இணைப்பு. அதில் நிறைய நேர்காணல், மாறுபட்ட கோணங்கள், செய்திக் குறிப்புகள்... என ஆர்வத்தைத் தூண்டும் வகையில் விஷயங்கள் இருந்தாக வேண்டும். இந்த இணைப்பினால் பத்திரிகையின் சர்க்குலேஷன் பத்தாயிரம் கூடி இருக்கிறதாம்! அந்த எண்ணிக்கையை நிலைநாட்டி மேலும் கூட்ட வேண்டிய நிர்வாக நிர்ப்பந்தம்.

இதில் மற்ற நிருபர்கள், புகைப்படக்காரர்களைவிட சுமன் வயதில் சிறியவளாக இருந்தாள். மீடியா துறைக்கு வந்தாலே சவால்தான். இதில் முழு திருப்தி என்பதற்கு இடமே இல்லை. ஆண்கள் நிறைந்த புகைப்படத் துறையில் சுமன் சாதிக்க நினைத்தாள். "உன் திறமையைச் செயலில் காட்டு...'' என்பது பல வருடங்களாக இந்தத் துறையில் ஊறிய அப்பாவின் அறிவுரை.

ஆரம்பத்தில் வயசுக் கோளாறு தூபம்போட, முரட்டு ஜீன்ஸ், டி-ஷர்ட், குட்டை டாப் அணிந்து, முடியைச் சின்னதாக வெட்டி, எந்த நேரமும் உருண்டு புரண்டு போட்டோ பிடித்தாள். கலைக் கண்ணோட்டம், கையில் துளி நடுக்கமில்லாத ஸ்திரத்தன்மை, கடுமையான உழைப்பு எல்லாம் இருந்ததால் சுமனால் விரைவில் மேலே போக முடிந்தது. இரவு இரண்டு மணிக்கு வேலை என்றாலும் அஞ்சமாட்டாள்.

அப்படிப்பட்டவளுக்கு ஒரு மாதமாக ஏதோ கற்பனை வறட்சி. இதனால் தினமும் எடிட்டரின் குத்தல் பேச்சைக் கேட்க வேண்டிய கட்டாயம். எழுத்தின் உதவி இல்லாமல் போட்டோவே ஒரு கதையைச் சொல்ல வேண்டும் என்பது அவர் கட்சி. வித்தியாசமாக இருக்க வேண்டும் என்றால், மனிதன் நாயைக் கடிக்கும்வரை காத்திருந்துதான் நியூஸ் போட வேண்டும்!

இலக்கில்லாமல் நடந்து கொண்டிருந்த சுமனின் கண்ணில் பட்டான் பதின்மூன்று வயசுப் பையன்.



# விடையில்லாத வினா!

கை வண்டியில் ரோடு போட்டுக் கொண்டிருந்த இடத்துக்குக் கல் பாறைகளை எடுத்துச் சென்று கொண்டிருந்தான். 'ஸ்டாப்...' என்று கத்தியவாறு சுமன் கேமராவுடன் துரத்தினாள்.

இடுப்பில் நிற்க முயன்று தோற்றுப்போன, ஆங்காங்கே ஒட்டுப் போட்ட அழுக்கு அரை ட்ராயர், மேலே கிழிந்த கையில்லாத முண்டா பனியன், பரட்டைத் தலை, பஞ்சடைந்த கண்கள், செருப்பில்லாத கால்கள், சதையில்லாத கைகள்... ஆடம்பர அங்காடிகளும் அலட்டும் பணப் பிரவாகமும் அழிக்க முடியாத இந்தியாவின் ஏழைமையின் நடமாடும் அடையாளங்கள்.

சாலையை அகலப்படுத்தி, கான்க்ரீட் செய்திட உதவும் ராட்சச கலவை இயந்திரங்களின் இடையே புகுந்து புறப்பட்டு துடிப்புடன் செயல்பட்டுக் கொண்டிருந்தான் அந்த குழந்தைத் தொழிலாளி. யாரோ தன்னை போட்டோ பிடிப்பது கண்டதும் போஸ் கொடுத்தான் பற்கள் தெரிய. டிஜிட்டல் கேமராவில் அவனை பல கோணங்களில் பதிவு செய்து கொண்டுவிட்டாள் சுமன். தொடர்ந்து கேள்விக் கணைகள்.

"பேரு பாண்டியன், அம்மா பாண்டின்னு கூப்பிடும். ஊரு வந்து... திருநெல்வேலிக்கு அப்பாலே ஏதோ கிராமம்... தெரியலே... வயசு 13... ஆனா ஆத்தா கழுதை வயசு ஆவுதுன்னு சொல்லும், எங்கப்பாரு செத்துப்பூட்டாரு... குடிச்சுக் குடிச்சு செத்துட்டாரு... ஒரு தங்கச்சி இருக்கு, பெறவு ஒரு தம்பி, ஒரு பாப்பா... எங்காத்தாவுக்கு சீக்கு, எப்பயும் இருமிக்கிட்டே இருக்கும். மிந்தியெல்லாம் வீட்டு வேலைக்குப் போகும், இப்ப மேலுக்கு முடியலே... அதான் நான் வேலை செய்யுதேன். நான் நாலாப்புல ஃபெயிலாயிட்டேன். தம்பி படிக்குது, முனிசிபாலிடி... தங்கச்சி வீட்ல சோறு பொங்குது, பாப்பாவை பாத்துக்குது.. எனக்குத் தெனைக்கும் அம்பது ரூபா கூலி கிடைக்குது... காலைல பேப்பரு போடுதேன்... அதில் கைக்காசு கிடைக்கும், சாயா, பன் வாங்கித் தருவாரு சேட்டு..." அவன் பேசப் பேச, சுமன் ஒரு கம்ப்யூட்டர் போலப் பதிவு செய்து கொண்டாள்.

"ஒம்பது மணிக்கு வேலைக்கு வருவேன். ஏழு மணி ஆயிடும், வேலை முடிய... வண்டி தள்றது, கல்லு போடறது, தண்ணி ஊத்துறது... இப்படி... சேட்டு ரொம்ப நல்லவரு.. ஓவர் டைம் தருவாரு..." என்று தன் உத்யோகப் பெருமையும் அடித்துக் கொண்டான்.

"போட்டோ வர்ற சனிக்கிழமை பேப்பர்ல வரும்... உனக்குக் காட்டறேன்.." என்றவாறு விடைபெற்றாள்.

ஹ்யூமன் டச்சுடன் கூடிய புகைப் படங்கள்... நறுக்குத் தெறித்தாற்போல குழந்தைத் தொழிலாளிகள் பற்றின கதை. முதல் தடவையாக எடிட்டர் குளிர்ந்து

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

**பானுகுமார்**

'குட் வொர்க்' என்று பாராட்டினார். சுமனுக்கு ஆகாயத்தில் பறப்பதுபோன்ற உணர்வு... கால் தரையில் பதியவில்லை.

**வா**ர இணைப்பில் கலர் பேஜில் கண்ணையும் கருத்தையும் கவர்வதைப் போல படமும் கட்டுரையும் வந்திருந்தன. பாண்டியன் கண்களில் துடிப்பும், துயரச் சுமையும் கலந்த ஒரு பாவம். 'யார் பெத்த பிள்ளையோ' என்று ஒவ்வொரு வாசகரின் மனதைத் தொடுவது நிச்சயம். சுமனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. பேப்பரில் பை லைன் பார்த்து விட்டுப் பலரின் போன்... அப்பாவுக்கும் பெருமை, குட்டி பதினாறடி பாய்ந்ததில். இரண்டு நாட்கள் கழித்துத்தான் பாண்டியனைப் பார்க்கப் போக முடிந்தது. கையில் பேப்பருடன் 'எங்கே பாண்டி?' என்று தேடியவாறு அந்தச் சாலையில் நடந்தாள் சுமன். அவனைக் காணவில்லை.

தொடர்ந்து அடுத்தடுத்த நாட்கள் சென்றாள். பாண்டியன் மட்டும் அங்கு இல்லை. அவன் இடத்தில் வேறு ஒரு பையன்.. ஏறத்தாழ அவனைப் போல... ஆனால் மராத்திப் பையன். பாண்டியனைப் பற்றி விசாரித்தாள்.

''உஸ்கோ சேட்னே காம்ஸே நிகால் தியா...'' என்று தயங்கியவாறு பதில் சொன்னான் அந்தப் பொடியன்.

"பாண்டி கா கர் கிதர் ஹை?" என்று அவன் வீட்டுக்கு வழி கேட்டாள். விலாசத்தைக் குறித்துக்கொண்டு விரைவாகத் தேடிக் கண்டுபிடித்தாள். வளைந்து நெளிந்து செல்லும் சிறுபாதை. இரண்டு பக்கங்களிலும் நெருக்கினாற்போல தகரக் குடிசைகள். மூக்கைப் பொத்திக்கொண்டிருந்த துப்பட்டாவை மீறி குப்பென்று ஓர் அழுகல் வாசம். யார் இவள் என்று ஆவலுடன் உற்றுப் பார்த்தவர்களைத் தாண்டிக்கொண்டு நடந்தாள். 'இதுதான் பாண்டியன் வீடா?' எட்டிப் பார்த்தாள்.

இருட்டுக் குகை போன்ற சிறிய குடிசை. அதில் ஓர் ஓரத்தில் கிழிந்த பாயில் அதைவிடக் கிழிந்தவளாகப் படுத்துக் கிடந்தவள் பாண்டியனின் தாயாக இருக்க வேண்டும். ஸ்டவ்வில் தட்டுத் தடுமாறி சமைத்துக் கொண்டிருந்த தங்கை... பத்து வயது இருக்கும். மண் தரையில் தவழ்ந்து கொண்டிருந்த குட்டிப் பாப்பா...

''பாண்டியன்...'' என்று இழுத்தாள் சுமன். குரல் கேட்டு எழுந்த பாண்டியனின் அம்மா... "யாரு?" என்றாள்.

"நான் சுமன்... பத்திரிகையிலிருந்து..."

"நீதானா அந்த அக்கா.. ஏம்மா உனக்கு



## இம்சை அரசி!

**உ**லகப் புகழ்பெற்ற ஆஸ்டரிக்ஸ் & ஆப்ளிக்ஸ் நகைச்சுவைச் சித்திரக் கதைகள், குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவரையும் கவரும் தன்மை கொண்டவை. இவற்றில் ஒன்றை மையமாக வைத்துத் தயாரிக்கப்பட்ட திரைப்படம், 'ஆஸ்டரிக்ஸ் & ஆப்ளிக்ஸ் - மிஷன் கிளியோபாட்ரா.' ரூ.100 கோடிக்கும் மேற்பட்ட பொருட் செலவில மிகப் பிரம்மாண்டமாகத் தயாரிக்கப்பட்டுள்ள இப்படம், விரைவில் தமிழில் வெளியாக உள்ளது - 'இம்சை அரசி 2-ம் கிளியோபாட்ரா' என்ற பெயரில். இதில் குட்டி நாய் டாக்மேடிக்ஸ் செய்யும் சாகசக் காட்சிகள் யாரையும் கவரும் தன்மை கொண்டன. படத்தில் வரும் பாலைவன மாளிகையின் கட்டுமானக் காட்சிக்கு, ஆயிரத்துக்கும் மேற்பட்ட துணை நடிகர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளனர். 'மேட்ரிக்ஸ் ரீலோடட்' புகழ் மோனிகா பெலூசி, கிளியோபாட்ராவாக 'வாழ்ந்துள்ளார்.

- நந்தனா



# மாயாவி

ஜீ.வி. ஃபிலிம்ஸ் உபயத்தில் டீவிக்கு வந்துவிட்டது 3D. அக்டோபர் இரண்டாம் தேதி முதல் ஜெயா டீவியில் ஆரம்பிக்கப்படவிருக்கும் 'மாயாவி' சீரியல், 3D எஃபெக்டில் எடுக்கப்பட்ட முதல் சின்னத்திரைத் தொடர். ஒவ்வொரு சனிக்கிழமையும் இரவு 9 மணிக்கு ஒளிப்பரப்பாகவிருக்கும் மாயாவி, இப்போதே எதிர்பார்ப்புகளை கிளறி விட்டிருக்கிறது.

"3D கண்ணாடியோட விலை ரூ.6.50தான். இதனால் கண்ணுக்கு எந்தவிதமான பாதிப்பும் ஏற்படாது. அந்தந்த பகுதி கேபிள் ஆபரேட்டர்கள், டீலர்கள்கிட்ட இந்தக் கண்ணாடி கிடைக்கும். மாயஜாலங்கள் நிறைந்த இத்தொடர், இளைஞர்களை, குறிப்பாகக் குழந்தைகளைக் குறி வைத்து எடுக்கப்பட்டிருக்கிறது. நிச்சயம் சக்சஸ் ஆகும்" என்று நம்பிக்கையுடன் சொல்கிறார்கள் ஜீ.வி. ஃபிலிம்ஸ் நிறுவனர்களான மகாதேவன் கணேஷ் மற்றும் உஷா வெங்கட்ரமணி இருவரும்.

**- ஸ்வேதா**

வேற விஷயமே கெடைக்கலியா... எழுத? அப்படியே எழுதினாலும் ஏன் எங்க பாண்டியப் பத்தி எழுதணும். அவன் ஒருத்தன்தான் வேலை செய்யறானா..? உன்னால என்னாச்சு பாரு. அவன் வேலை போயே போச்சு. அம்பது ரூபா வேலை. இப்ப நீயா தரப்போறே..." என்று அவள் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க இரைந்தாள். இவள் கோபத்திலிருந்து தப்பித்தால் போதும் என்று வேகமாக வெளிநடந்தாள் சுமன்.

வந்த வேகத்தில் தடாலென்று எதிரே வந்தவன் மேல் மோத இருந்தவள், கடைசி நிமிடத்தில் சுதாரித்துக் கொண்டாள்.

'அட... பாண்டியன்!' நல்லவேளை மோதவில்லை. அவன் கையில் நாலு க்ளாஸ் டீ ஏந்தி அவசரமாக எங்கோ போய்க் கொண்டிருந்தான்.

"அக்கா... தோ வாரேன்" என்று ஓடினான்.

ஐந்து நிமிடத்தில் திரும்பி வந்தவனிடம் போட்டோவைக் காண்பித்து "த பாரு... உன் படம், எப்படி ஜம்முனு வந்திருக்கு" என்றாள்.

"அட நானா இது..." என்று ஆச்சரியப்பட்டுவிட்டுத் திரும்பத் தந்தான்.

"நீயே வெச்சுக்க. உனக்குத்தான்..." என்றாள் சுமன்.

"வேணாக்கா... ஏற்கெனவே ஆத்தாவுக்குக் கோபம்... இதைப் பார்த்து ஏசுவாங்க... வேணாம்..." என்றான்.

"ஏன் பாண்டி... இதாலதான் உன் வேலை போயிடுச்சா..?"

"'என்னடா நீ ரொம்பப் பெரிய மனுஷனாயிட்டியா... பேப்பர்ல பேட்டி தர்ற அளவுக்கு நீ பிஸ்தா ஆயிட்டியா'ன்னு அடிச்சுட்டார் சேட்டு. வேலையை விட்டும் தூரத்திட்டாரு. வூட்ல ஆத்தாவும் ஒரே கூப்பாடு. சேட் அடிச்சதுல முகமெல்லாம் வீங்கிப் போச்சு" என்று கன்றிப் போன கன்னத்தைக் காண்பித்தான்.

"இப்ப என்ன செய்யறே?"

"பக்கத்தில ஒரு டீக்கடைல டீ சப்ளை, க்ளாஸ் கழுவற வேலை... ஆனா சம்பளம் கம்மி.. வேலை ஜாஸ்தி..." என்றவன், "நான் வரேன்கா. மொதலாளி சத்தம் போடுவாரு" என்று ஓட யத்தனித்தான். அவன் கையில் சாக்லேட் பாக்ஸைத் திணித்தாள். அவன் கண்ணில் சிறு ஒளி... வாங்கிக் கொண்டு திரும்பி நடந்தான்.

குற்ற உணர்வு மனதைக் குறுகுறுக்க, சுமன் கால்போன போக்கில் நடந்தாள்... இலக்கு புரியாமல். ●

**ஒரு கலைக்கூடத்தைப் போலக் காட்சியளிக்கிறது பார்த்திபனின் அலுவலகம். புதுமை+வித்தியாசக்காரரான இவருடைய அறை முழுவதும் கலைச் சின்னங்களின் வெளிப்பாடுகள். ஒரு காலைப் பொழுதின் சந்திப்பில் உரையாடல் தொடங்குகிறது. திரையுலகம், வெற்றி, தோல்வி, வாழ்வியல் போராட்டம் குறித்து நீள்கின்ற விசாரிப்பின்போது, அவரிடமிருந்து மெல்லிய ஆன்மிக தாகத்தின் அதிர்வுகளைக் காண முடிகிறது.**

**இயக்குநர் பார்த்திபன், கவிஞர் பார்த்திபன், நடிகர் பார்த்திபனைப் பற்றிச் சொல்லுங்களேன்?**

*(சில நொடிகள் கண்களை மூடி யோசித்து விட்டு...)* "எனக்குள்ள இருக்கிற இந்த மூணு பேர்கிட்டேயும் ஒவ்வொரு விஷயம் இருக்கு. இயக்குநர் பார்த்திபன் ஒரு படைப்பாளி. கவிஞர் பார்த்திபன் - இவனை, இந்த நெருப்பு தீர்ந்து போகாமல் காப்பாத்தணும்னு நெனைக்கிறேன். நடிகர் பார்த்திபன் - எனக்கு ஏற்பட்டிருக்கிற இந்த நடிகன் என்கிற இமேஜை அழிக்க முயற்சி செய்து கொண்டிருக்கேன்.

அதாவது படைத்தல், காத்தல், அழித்தல் இந்த முத்தொழிலும் இந்த மூணு பேருக்குள்ளேயும் நடந்துக்கிட்டிருக்கு."

**'ஹவுஸ்ஃபுல்', 'குடைக்குள் மழை' போன்ற படங்களைத் தந்த பார்த்திபன் 'பச்ச குதிர' ஏறி சறுக்கி விழுந்தது ஏன்?**

"என்னோட முதல் படமான 'புதிய பாதை' கேரக்டரைப் போல நெகட்டிவ் கேரக்டர்தான் பச்ச குதிரையிலேயும் இருக்கு. ஆனால் புதிய பாதையை ஏற்றுக்கொண்ட மக்கள், இதை ஏற்காத காரணம், இடைப்பட்ட இந்தப் பத்தாண்டுகால பார்த்திபனின் இமேஜாகக்கூட இருக்கலாம். நீங்க கேட்ட மாதிரி ஹவுஸ்ஃபுல், குடைக்குள் மழையைத்தான் என்னிடம் எதிர்பார்க்கிறாங்களோ தெரியலை!

இருந்தாலும் இந்தப் படத்தின் சரிவு ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய விஷயம்."

**தொழில்ரீதியா 'பச்ச குதிர'யை எப்படி அடக்கினீர்கள்?**

"எனக்கு நிறைய நண்பர்கள். ஆனால் வியாபார ரீதியில் உதவும் நண்பர்கள் குறைவு. சில நேரங்களில் வர்த்தக ரீதியாக என்னை நானே நிலைநிறுத்திக்கொள்ள இதுபோன்ற முயற்சிகளில் இறங்கி, மீண்டு வரவேண்டியிருக்கிறது. இந்த நேரத்தில் எல்லாம் நம்ம ஃபீனிக்ஸ் சார்தான் எனக்கு ரோல் மாடல். மொத்த நஷ்டமும் பெற்ற நிலையிலும், நான் மீண்டெழுந்திடுவேன்."

**ஒரு மாதிரி சமூகக் கோபத்தில் நீங்கள் இருப்பதாகத் தெரிகிறதே?**

"கோபம் இல்லை; வருத்தம். சமீப காலமாக பத்திரிகைகளில் 'பச்ச குதிர எடுத்துக் கையைச் சுட்டுக்கொண்ட பார்த்திபன், தமது இமேஜை நிறுத்திக் கொள்ள விழா எடுக்கிறார்' என்றெல்லாம் செய்தி வந்தது. இத்தனைக்கும் 'பச்ச குதிர' படத்திலும் ஒரு மெல்லிய கதையம்சம், நீரோட்டம் இருந்தன.

இதைச் சரியாக, நேர்மையாக 'கல்கி' மட்டும்தான் விமர்சனம் செய்தது.

டி.சி.ஆர். என்று சொல்லப்படும் டெய்லி கலெக்ஷன் ரிப்போர்ட்டுக்குப் பதிலாக கல்கியின் விமர்சனத்தைத்தான் நான் பலருக்கும் காட்டினேன்."

# பார்த்திபனின்

**உங்களது குடைக்குள் மழையும் பெரியதாக ரீச்சாகவில்லையே, ஏன்?**

"குடைக்குள் மழை வெளியான போது, இந்தப் படத்தில் இன்னின்ன இருக்காது என்று விளம்பரம் செய்தேன். ஒருவேளை இது இது இருக்கும் என்று

விளம்பரம் செய்திருந்தால் இன்னும் ரீச்சாகி இருக்குமோ தெரியவில்லை.

முதலில் மக்களை தயார்ப்படுத்தி விட்டோ அல்லது அதற்கான எதிர்பார்ப்புகளை உருவாக்கியபின்போ படம் வெளிவர வேண்டும் என்றுகூட நினைக்கிறேன்.

# ஆன்மிகத் தேடல்!

இப்போது டி.வி.யில் இந்தப் படத்தைப் பார்த்துவிட்டு மணிக்கணக்கில் போனில் பேசுகிறார்கள். நுணுக்கம், ஆழம் பற்றிச் சிலாகிக்கிறார்கள்.

ஜெர்மன் திரைப்பட விழாவில் குடைக்குள் மழையை வெளியிட்டார்கள். காட்சிக்குக் காட்சி கைதட்டல் வாங்கியது. விழா முடிந்ததும் ஒரு பெண்மணி 'இந்த மாதிரி படமெடுத்தால் உங்கள் நாட்டில் மதிப்பார்களா?' என்று கேட்டார்.

இவ்வளவுக்கும் சப்டைட்டில் பார்த்துத்தான் காட்சிகளை அவர்களால்

புரிந்துகொள்ள முடியும்.

**இந்த வெற்றி தோல்விகள், ஏற்ற இறக்கங்களில் உங்கள் மனநிலை என்ன?**

"வெற்றி தோல்விகள் நிரந்தரம் இல்லை என்பது புரிந்து விட்டது. இதைத் தாண்டிய ஒரு சந்தோஷம் எனக்குள் உண்டு.



புதிய பாதை தொடங்கி பச்சக் குதிரை வரைக்கும் எனக்குள்ளே இருக்கிற வளர்ச்சியை என்னால் உணர முடிகிறது. இந்த ஃபயர், ஃபயர் போகிறவரை இருக்க வேண்டும் என்கிற தீவிரம் எனக்குள் இருக்கிறது.

குட்டிக் குட்டியான தேடல்கள், மகிழ்ச்சியைக் கொடுக்கின்றன. என்னால் கால் மணி நேரத்தைக்கூட காசாக்குவது எப்படி என்று யோசிக்க முடியாது. உள்ளுக்குள் இருக்கும் நெருப்பை சாம்பல் பூசு விடாமல் பார்த்துக் கொள்ளவே விரும்புகிறேன்."

**திரையுலகில் கற்றதும் பெற்றதும் என்ன?**

"பெற்றதை இழந்து விட்டேன். கற்றது - பெற்றதை இழந்திருக்கக் கூடாது என்ற பாடம் தான் வேறென்ன? நான் நிஜமாகக் கற்றது நாளைய வாழ்க்கைக்கான முதலீடு. அதுவே நான் பெற்றுள்ள அனுபவ ஞானம்."

**ஆன்மிக நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறீர்கள். கோவை 'ஈஷா ஃபவுண்டேஷன்' சென்று வந்திருக்கிறீர்கள். ஆன்மிகத் தேடல் ஆரம்பமாகி விட்டதா?**

(இலேசாக முறுவலிக்கிறார்) "கோவை வெள்ளியங்கிரி மலையில் இருக்கிற ஈஷாவில் இரண்டு, மூன்று நாட்கள் தங்கியிருந்தேன். தெளிவும், அன்பும், கருணையும் கொண்ட பிரம்மச்சாரிகள், சந்நியாசிகள் நிறைய பேர் இருக்கிறார்கள். அவர்களுடைய அமைதி எனக்குள் சில போராட்டங்களைக் கொடுத்தது. அமைதிக்கான தேடலின் ஆரம்ப நிலையில் நான் இருக்கிறேன்னு நினைக்கிறேன். 'ஏதாவது பேசிவிட்டுப் போங்கள்' என்றார்கள்.

'உங்களைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாக இருக்கிறது' என்று சொல்லிவிட்டு வந்தேன்."

**'பார்த்திபன் கனவு' எப்படிப்பட்டது?**

"கனவுகளே இல்லை. கனவுகள் காண்பதற்குக் கண்கள் உறங்குவதே இல்லை. ஹாயிடே தூக்கம் போட்டுப் பல வருடங்கள் ஆகிவிட்டன. 1989, ஏப்ரல் 15 என் முதல் படம் வெளியாகி வெற்றியடைந்த காலம். அந்தக் காலம்தான் நான் வெற்றி மிதப்பில் திரிந்த காலம்.

இன்றுவரை வெற்றியைத் தக்கவைத்துக் கொள்ளும் போராட்டமே தொடர்கிறது.

'நேற்று இருந்தேன்
நாளை இருப்பேன் - இன்று
இருக்கிறேனா தெரியவில்லை'

- ஒரு கவிஞனின் கவிதை வரிகள் இவை. என் கண் திறந்த கனவும் இதுதான்."

- சொல்லி முடித்து மௌனிக்கிறார் பார்த்திபன். அங்கே காற்றின் கிசுகிசுப்பைத் தவிர பேரமைதி.

**- அருணா. செந்தில்குமரன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# ஆயுள் வளர்க்குமா ஆயுர்வேதம்?

ஆயுர்வேத சிகிச்சைக்கு என்றைக்கும் மவுசு உண்டு என்றாலும் பத்தியம், நாள்பட்ட தீர்வு போன்றவை அதன் மகத்துவத்தைக் குறைப்பதாக நீண்டகாலக் குறையொன்று உண்டு. ஆனால் "இது குறை இல்லை. ஆயுர்வேத மருத்துவத்தின் புகழுக்குச் சிலரால் கற்பிக்கப்படும் கறை" என்கிறார் சென்னை அப்பல்லோ மருத்துவமனையைச் சார்ந்த ஆயுர்வேத மருத்துவ நிபுணர் எம்.எஸ்.போபி கிளாட்ஸ்டோன். எனில் 'அதன் மகத்துவம் என்ன? மக்களுக்கு அதனால் உண்டாகும் பயன்கள் என்னென்ன?' என்று நாம் கேட்டதுதான் தாமதம்... படபடவெனப் பொரிந்து தள்ளிவிட்டார்.

"பிரம்மனிடம் உருவாகி, இந்திரனை அடைந்து, முனிவர்கள் மூலம் மனிதர்களுக்குக் கிடைத்த பொக்கிஷம்தான் ஆயுர்வேதம். ஆச்சார்யா சரகா, சுஷ்ருதா, வாக்படா ஆகிய மூன்று முனிவர்கள் தான் ஆயுர்வேதத்தைப் பரப்பினர். இவர்கள் 5000 ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய மருத்துவ நூல்கள்தான் இன்றைக்கு ஆயுர்வேத மருத்துவ முறையாக மாறி பலன் அளித்துக் கொண்டிருக்கின்றன."

**ஆயுர்வேதத்தின் அடிப்படை என்ன?**

"நோய்த் தடுப்பு, சிகிச்சை என்று இரண்டு விஷயங்கள்தான் இதன் அடிப்படை. நோய் வராமல் தடுத்துக்கொள்வதை ஆரோக்யம் என்று கொள்வது வழு. ஏனெனில் நோய் வராமல் தடுத்துக் கொள்வது என்பது இயல்பான நிலை. இதைத் தாண்டி உடல், மனம், ஆத்மா மூன்றையும் ஒரு நிலைப்படுத்தி ஆரோக்யம் காப்பதே சிறந்தது. இதைத் தான் ஆயுர்வேதம் வலியுறுத்துகிறது."

**ஆயுர்வேதத்தில் எந்தெந்த நோய்களுக்கெல்லாம் சிகிச்சை உண்டு?**

"முழங்கால் மூட்டு வலி, ஆஸ்டியோஸ்போரோசிஸ், முடக்குவாதம், ஸ்பாண்டிலோசிஸ், ஆஸ்துமா, சைனசைட்டிஸ், தோல் நோய்கள் என்று நாள்பட்ட பல நோய்களைக் குணப்படுத்தும் ஆற்றல் ஆயுர்வேத மருத்துவத்துக்கு உண்டு."

* டாக்டர் போபி கிளாட்ஸ்டோன்

**ஆயுர்வேதத்தில் மூட்டு வலிக்கு முழுமையான நிவாரணம் கிடைக்கப் பெறுகிறது என்பது உண்மையா?**

"ஆம். மூட்டு வலியைப் போக்க ஆயுர்வேதத்தில் 15 நாட்கள் பஞ்சகர்ம சிகிச்சை



### ஐயோ பாவம்!

இப்போது 'காபி வித் சுசி' இல்லை... பழையபடி 'ரேடியோ மிர்ச்சி' சுசிதான். "ஒரு படத்துல இணை இயக்குநரா வொர்க் பண்ணிட்டிருக்கேன். அடுத்து இயக்கம்தான்" என்று கூறுபவர், மறந்தும் கூட காபி பற்றிப் பேசுவதில்லை. நச்சரித்துக் கேட்டால், 'அடுத்து நான் கரண்டி வித் சுசி ஆகறதுக்குள்ள ஓடிப் போயிடுங்க' என்று பயமுறுத்துகிறார். ஐய்யோ பாவம்! இந்தளவுக்கா பயமுறுத்தியிருப்பாங்க!

- விக்டர்

முறை உள்ளது. உள்ளுக்கு மருந்தும் வலி உள்ள இடத்தில் எண்ணெய் சிகிச்சையும் முதல் 7 நாட்கள் அளிக்கப்படும். இச்சிகிச்சையின் முடிவில் உடலில் உள்ள நச்சுக்கள் அனைத்தும் வயிற்றுக்குக் கொண்டுவரப்பட்டு, 8ஆவது நாள் உடலில் இருந்து மலம் மூலம் வெளியேற்றப்படும். இறுதியாக கடைசி 7 நாட்கள் உடலில் உள்ள ஆற்றல் மையங்கள் தூண்டப்படுகின்றன. இச்சிகிச்சைக்கென 15 நாட்கள் கண்டிப்பாக மருத்துவமனையில் நோயாளி தங்க வேண்டும்."

**கேரள எண்ணெய் சிகிச்சை முறை ஆயுர்வேதத்தில் எப்படிப் பயன்படுகிறது?**

"அவற்றின் பயன்பாடுகள் அளப்பரியன. ஆயுர்வேதத்தோடு அவை இணையும்போது சிகிச்சை அடுத்த கட்டத்துக்குக் கொண்டு போகப்பட்டு, நோய் எளிதில் குணமாகிறது. கேரள எண்ணெயான அப்தியங்கம், உடல்வலி, உடல் சோர்வுகளை நீக்குவதோடு, தோல் வியாதிகளுக்கும் தீர்வாகப் பயன்படுகிறது. இப்படிப் பல எண்ணெய்கள் இருக்கின்றன."

**வர்மக் கலைக்கும் ஆயுர்வேதத்துக்கும் உள்ள தொடர்பு என்ன?**

"ஆயுர்வேதத்தின் சிறப்பம்சமே வர்மக் கலைதான். வர்மத்தையும் ஆயுர்வேதத்தையும் வெவ்வேறாகப் பிரித்துப் பார்க்க முடியாது. ஒருவருக்கு உடலில் உள்ள பிரத்யேக ஆற்றல் மையங்களில் (வர்மப் புள்ளிகள்) பிரச்னை இருக்கும் பட்சத்தில், ஆயுர்வேதம் மற்றும் வர்மம் இரண்டும் கலந்த சிகிச்சையினை வழங்குகிறோம். இதன் மூலம் நோய் எளிதில் தீர்க்கப்படுகிறது."

**ஆயுர்வேத சிகிச்சைகள் விலை மிகுந்தவை என்று கூறப்படுகிறதே...**

"பலரும் பல சிகிச்சை முறைகளை மேற்கொண்டு சுகம் கிடைக்காமல், கடைசியாக நோய் முற்றிய நிலையில் தான் ஆயுர்வேதத்துக்கு வருகிறார்கள். இந்நிலையில் சிகிச்சை கொஞ்சம் விலை மிகுந்தது என்பது உண்மைதான். ஆனால் ஆரம்பத்திலிருந்தே பார்க்கத் தொடங்குவோர், ஆயுர்வேதத்தைவிட குறைந்த செலவு தரக்கூடிய சிகிச்சையைக் காண முடியாது."

**ஆயுர்வேத சிகிச்சைகளுக்கு மக்களிடம் வரவேற்பு எப்படி இருக்கிறது?**

"முன்பு அதன் மகத்துவம் புரியாமல் இருந்தது உண்மைதான். இப்போது நிலைமை மாறிவிட்டது. மக்கள் யோசிக்க ஆரம்பித்துவிட்டார்கள். பிரச்னையை அப்போதைக்குத் தள்ளிப்போட வேண்டுமா, நிரந்தரத் தீர்வு வேண்டுமா என்று அலசுகிறார்கள். இறுதியில் ஆயுர்வேதத்தின் அருமையைப் புரிந்து கொள்கிறார்கள். நூறு வருடங்கள் வாழ, நோயில்லாமல் வாழ என்னென்னவோ செய்கிறோம்; கடைப்பிடிக்கிறோம்... எளிய வழி, ஆயுர்வேதத்துக்கு மாறி ஆயுளை வளர்ப்பதுதான்!"

- ம.மனோசௌந்தர்

படம் :
பொள்ளாச்சி சுந்தரம்

# புலிகளால் நிகழ்ந்த அணி மாற்றம்?

## - 'திகுதிகு' திருமா

திடுதிப்பென கலைஞருடன் கைகுலுக்கி, அம்மாவுக்கு அதிர்ச்சி வைத்தியம் கொடுத்திருக்கிறார் விடுதலைச் சிறுத்தைகளின் பொதுச் செயலாளர் தொல்.திருமாவளவன். அறிவாலயத்திலிருந்து புறப்பட்டு, காரில் பயணித்தபடியே 'சுடச்சுட' நம்மிடம் பேசினார்...

அன்புச் சகோதரியை இப்படி நட்டாற்றில் விட்டுவிட்டீர்களே... இது நியாயமா?

"ஒரு திருத்தம். அவர்கள்தான் எங்களை நம்ப வைத்துக் கழுத்தறுத்து, நட்டாற்றில் விட்டிருக்கிறார்கள். தொகுதிப் பங்கீடு என்ற பெயரில் எங்களை மிகவும் அவமானப்படுத்தி, சொற்ப இடங்களையே ஒதுக்கியது அ.தி.மு.க. இப்போது திடீரென எந்த விதக் காரணமும் சொல்லாமல், அந்த இடங்களையும் பிடுங்கிக் கொண்டது. மாவட்ட நிர்வாகத்திடம் கேட்டால், 'அம்மா கூட்டணியிலிருந்து உங்களைத் தூக்கிட்டாங்க' என்ற பதில்தான் கிடைத்தது. இது தொடர்பாக ஜெயலலிதாவைச் சந்திக்க முயன்றபோது, அவர் அதற்கு மறுத்துவிட்டார். அதன் பிறகுதான், அ.தி.மு.க. எங்களை அரசியல் அகதிகளாக்க முயற்சி செய்கிறது என்பது புரிந்தது. அதனால்தான் இந்த முடிவு."

தொகுதி கிடைக்கவில்லை என்பதற்காக எப்படி மாற்று முகாமில் அதுவும் ஒரே நாளில் கைகோக்க முடிந்தது? முன்கூட்டியே பேசிவிட்டீர்களா?

"அ.தி.மு.க. கூட்டணியில் எங்களுக்கு இழைக்கப்பட்ட அவமதிப்புகளை உன்னிப்பாகக் கவனித்து வந்துள்ளது தி.மு.க. சரியான தருணத்தில் அவர்கள் தொடர்புகொண்டு அழைப்பு விடுத்தார்கள். கூட்டணியில் இணைந்தோம். அ.தி.மு.க. கூட்டணியில் அவமதிப்பைத் தவிர, வேறு எந்த மதிப்பும் கிடையாது."

புலிகள் விஷயத்தில் அ.தி.மு.க. தலைமையை வெறுப்பேற்றும் அளவுக்கு நீங்கள் செயல்பட்டதுதான்



**இந்த அவமானங்களுக்குக் காரணமா?**

"இது முழுக்க முழுக்க யூகம்தான். புலிகள் விஷயத்தில் எனது நிலைப்பாடு அ.தி.மு.க. தலைமையைச் சங்கடப்படுத்தியிருக்குமா என்பது எனக்குத் தெரியவில்லை. ஆகவே இதுதான் காரணம் என்று இப்போது உறுதியாகச் சொல்ல முடியாது."



**தனித்துப் போட்டியிட்டிருக்கலாமே... ஒரு வேளை சிறுத்தை பயந்துவிட்டதா?**

"தனித்துப் போட்டியிட வேண்டிய காலம் கடந்துவிட்டது. சரியான சமயத்தில் சரியான இடத்தில் கூட்டணி அமைத்துவிட்டோம். எங்களுக்குப் பயமெல்லாம் கிடையாது."

**தேர்தலுக்குத் தேர்தல் அணி மாறுவது உங்கள் இமேஜைப் பாதிக்காதா?**

"இந்த முடிவு எங்கள்மீது திணிக்கப்பட்ட நெருக்கடிகள் காரணமாக எடுக்கப்பட்டது மற்றபடி, அடிக்கடி அணி மாறுவது எங்களுடைய திட்டமே அல்ல. இது எங்களைத் தற்காத்துக் கொள்ளும் முயற்சி என்பது மக்களுக்கும் தெரியும், தொண்டர்களுக்கும் புரியும்."

**மேல்மட்டத்தில் கைகுலுக்கி விட்டீர்கள். அடிமட்டத் தொண்டர்கள் இணைந்து செயல்படுவார்களா?**

"அதற்காக முறைப்படி சில அறிவிப்புகளையும், அறிவுரைகளையும் வழங்கியுள்ளோம். இன்றைய அரசியலின் யதார்த்தத்தை எல்லாத் தொண்டர்களுமே புரிந்து வைத்துள்ளனர். அவர்கள் இணைந்து களப் பணி ஆற்றுவதில் சிரமம் இருக்காது."

**ஆக, சட்டமன்றத்தில் இனி விடுதலைச் சிறுத்தைகளின் பணி ஆளுங்கட்சிக்கு ஆதரவாக மேஜை தட்டுவதுதானா?**

*(சட்டென்று கோபமாகிறார்)* "கட்டிக் காட்ட வேண்டியதைச் சுட்டிக் காட்டுவோம் தட்டிக் கொடுக்க வேண்டியதற்குத் தட்டிக் கொடுப்போம்."

**நேற்றுவரை தி.மு.க. அரசுக்கு நேர் எதிராகவே உங்கள் பேச்சு இருந்துள்ளது இப்போது எப்படிப் பிரசாரம் செய்வீர்கள்?**

"நாங்கள் அ.தி.மு.க. கூட்டணியில் அங்கம் வகித்தபோதுகூட தி.மு.க. அரசின் பணிகளை கண்மூடித்தனமாக எதிர்க்கவில்லையே. இந்த உள்ளாட்சித் தேர்தலில் கூட்டணிகளின் செயல் திட்டங்களை முன்வைத்துப் பிரசாரம் செய்வோம்."

- முரார்

படங்கள் : ஸ்ரீஹர்

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

அக்டோபர் 2006

தீபாவளி ஸ்பெஷல்

ஆஹா 50! பரிசுப் போட்டி!

3 புத்தகங்கள்

அதிகப் பக்கங்கள்

பண்டிகை மூடு படிக்கும்போதே வரும்....!



வி.ஐ.பி. தீபாவளி

காயாத தாம்பூலம்

சரவெடி... சிரிவெடி !

குல்லா போடும் ரசகுல்லா



6-60

க்விக் மேக்கப்!

தித்திக்கும் இலவச இணைப்பு!

ஸ்வீட்ஸ் 64

வழங்குவோர்






# ஏக்கம்

அந்தக் கோயில் சிதிலமடைந்திருந்தது. வௌவால்கள் தொங்கிக் கொண்டிருந்தன. மூக்கைப் பிடித்துக்கொள்கிற அளவுக்கு வீச்சம் இருந்தது. பிராகார வெளியில் இருந்த ஆலமரத்தடியில்தான் கொஞ்சம் மூச்சுவிட முடிந்தது.

மெதுவாக நடந்த பத்ரியைப் பின்புறமாகச் சமீபித்த சிவா தயங்கி, "தம்பி!" என்றான்.

திரும்பிப் பார்த்த பத்ரி வியந்து, "நீங்க... எங்கிட்ட பஸ் ஸ்டாண்டுல..." என்றான்.

"நான்தான். தப்பா நினைச்சுக்காதீங்க தம்பி. மாப்பிள்ளை உங்க நண்பர்தான்னு சொல்லிக்காம, அப்படியே சுமுக்கமா இருந்துட்டீங்களே..."

"நீங்ககூடத்தான் பொண்ணோட அண்ணன்னு சொல்லிக்கலை."

"உண்மைதான். பொண்ணைக் கொடுக்கறதுக்கு முன்னாடி மாப்பிள்ளையைப் பத்தி விசாரிக்கறது சகஜம் தானே தம்பி?"

"சகஜம்தான். ஆனா பத்திரிகை அடிச்சுக் கல்யாண ஏற்பாடெல்லாம் நடந்துக்கிட்டிருக்கும்போதா விசாரிப்பாங்க?"

"தப்புதான்!"

"திடீர்னு என்ன சந்தேகம்?"

"ஊர்ல ஒருத்தர் ரெண்டு பேர் ஒரு மாதிரியா பேசனாங்க. அதான்... மனசு தவிச்சுப் போயி..."

"என்ன பேசினாங்க?"

"பெரிய கோடீஸ்வரங்க. எதுக்குப் போயும் போயும் உன் வீட்ல சம்பந்தம் செய்யணும்னு சந்தேகப்பட்டு சில பேரு கேக்கறானுங்க. மாப்பிள்ளைக்கு ஏதாச்சும் பிரச்னை இருக்கலாம்னு சொல்றானுங்க."

"அதெல்லாம் எதுவும் கிடையாது."

"இப்பத் தெளிவாப் புரிஞ்சுக்கிட்டேன். அன்னிக்குக் குழம்பிப் போயிருந்தேன்."

"எப்படித் தெளிவானீங்க?"

"உங்களை மாதிரி அஞ்சாறு பேரை விசாரிச்சுதான்! யாருமே எங்க மாப்பிள்ளையைப் பத்தி தப்பா ஒரு வார்த்தை சொல்லலையே... அப்புறம் தம்பி, மாப்பிள்ளைகிட்ட நா விசாரிச்சதைச் சொல்லிட்டீங்களா?"

"ஆமாம்!"

"போச்சுடா! ஏன் சொன்னீங்க?"

"அவரு என் நண்பருங்க. எப்படிச் சொல்லாம இருக்க முடியும்?"

"கோபப்பட்டுதான் புறப்பட்டு வந்தி



10

பட்டுக்கோட்டை



ருக்காரா?"

"இல்லை... சும்மா உங்க தங்கச்சியைப் பாக்க வந்திருக்காரு. விசாரிக்கிறது சகஜம் தானேன்னு சாதாரணமா சொன்னார். யாரோ விசாரிச்சாங்கன்னுதான் நானும் சொன்னேன். நீங்க பொண்ணோட அண்ணன்னு இங்க வந்துதானே எனக்கே தெரியும். வீட்டு வாசல்ல சைக்கிளை வெச்சிட்டுப் பதுங்கினீங்களே, அப்பதான் தெரியும்."

"பார்த்துட்டீங்களா? நான் பயந்தே போய்ட்டேன். சரி, வாங்க. வீட்டுக்குப் போலாம்."

"கொஞ்ச நேரம் கழிச்சுப் போகலாம். ரெண்டு பேரும் மனசு விட்டுப் பேசட்டும். நாம கடைத் தெரு பக்கம் நடக்கலாமா?" என்றான் பத்ரி.

இருவரும் கோயிலை விட்டு வெளியேறி கடைத் தெருப் பக்கம் நடக்கத் துவங்கினார்கள்.

குடித்த காபி தம்ளரைக் கீழே வைத்தான் குமரன்.

"நான் உள்ளே போகட்டுமா?" என்றாள் தயக்கமாக மஞ்சரி.

பின்னிப் பிசைந்து கொண்டிருக்கும் அவளுடைய மருதாணி பூசிய விரல்களைப் பார்த்தான் குமரன். பூஜாவுக்கு நெயில் பாலீஷ் போட்ட விரல்கள்! முன்புறம் எடுத்துப் போடப்பட்ட கூந்தல் அழகாக இருந்தது. பூஜாவுக்கு இப்படி நீளமான கூந்தல் இல்லை! வளைந்த அழகான புருவங்களைப் பார்த்தான். பூஜாவுக்கு பியூட்டி பார்லரில் அடிக்கடி திருத்தப்படும் புருவங்கள்!

'அய்யோ! ஏன் இப்படி ஒவ்வொன்றையும் இந்தப் பிசாசு மனம் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருக்கிறது?

சொல்லி விடலாமா? பூஜாவைப் பற்றிச் சொல்லி விடலாமா?"

"மஞ்சரி!"

"ம்"

"எனக்கென்னவோ உங்கிட்ட ரொம்ப



# ம்!

ரபாகர்

ரொம்ப உண்மையா இருக்கணும்னு தோணுது. தப்பா நினைக்காதே. இல்ல, நீ தப்பா நினைச்சாலும் சரி. இதைச் சொல்றதுதான் நியாயம்னு தோணுது."

"என்ன?"

"நான் காலேஜ்ல படிச்சப்போ பூஜான்னு ஒரு பொண்ணை விரும்பினேன் மஞ்சரி."

"என்னது!"

"முழுசும் கேட்டு! அவளும் என்னை விரும்பினா. நடுவுல நடந்த ஒரு சதியால அவ என்னைச் சந்தேகப்பட்டு விலகி, வேற ஒருத்தனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா. நான் தடுமாறிப் போனேன். வீட்ல எனக்குக் கல்யாணம் பண்ண ஆசைப்பட்டப்போ என்னால மறுக்க முடியலை. நம்ம கல்யாணத்துக்கப்புறம் கொஞ்சம் கொஞ்சமா எனக்கு உன் மேல ஒரு பாசம் கண்டிப்பா வரும். அது வரைக்கும் நீ பொறுமையாக் காத்திருக்கணும். காத்திருப்பியா?"

"அடச்சீ! பொறுக்கி நாயே! எந்திரிடா! இதே மாதிரி ஒரு காதல் கதையை நான் சொன்னா நீ ஒத்துக்குவியா? பணக்காரங்க இறங்கி வர்றப்பவே சந்தேகப்பட்டோம். சரியாப் போச்சு. இன்னும் ஒரு நிமிஷம் இங்க நீ இருந்தே, மரியாதை கெட்டுடும்! ஆமாம், அவளை சும்மா காதல் மட்டும்தான் செஞ்சியா, இல்ல வயித்துல குழந்தையும் கொடுத்தியா?"

திடுக்கிட்டு நிமிர்ந்தான் குமரன்.

"நான் உள்ளே போகட்டுமான்னு கேட்டேன்" என்றாள் விரல்களைப் பார்த்துக் கொண்டு.

கர்ச்சிப் எடுத்து நெற்றியில் ஒற்றிக் கொண்டான் குமரன்.

'ச்சே! கற்பனையே கசக்கிறதே! இதே போல இவள் பேச மாட்டாள் என்பது என்ன நிச்சயம்?'

"மஞ்சரி, இப்ப நீ உள்ளே போய்ட்டா இந்த மேஜை, நாற்காலி கூடத்தான் நான் பேசிட்டிருக்கணும். உங்கண்ணியோ, என் ஃப்ரெண்டோ வர்ற வரைக்கும் நாம ஏதாவது பேசிட்டிருக்கலாமே... உனக்கு என்னல்லாம் பிடிக்கும்னு சொல்லேன்"

"எனக்கு லைட் வாடாமல்லி கலரும், செம்பருத்திச் சிவப்பும் பிடிக்கும். சாப்பாட்டுல மீன் பிடிக்கும்; சிக்கன், மட்டன் பிடிக்காது. கம்ப்யூட்டர்ல கேம்ஸ் விளையாடப் பிடிக்கும். டி.வி.ல க்விஸ் புரோக்ராம்ஸ் பிடிக்கும். கிரிக்கெட், டென்னிஸ் பிடிக்கும்."

"விளையாடுவியா?"

"ம்கூம். பார்க்கப் பிடிக்கும்."

"என்ன விளையாட்டு விளையாடுவே?"

"கேரம், சீட்டுக்கட்டு. நீங்க?"

"நீ சொன்ன எல்லாமே எனக்குப் பிடிக்கும். புக்ஸ் படிப்பேன். இங்கிலீஷ் நாவல்ஸ். நிறைய படம் பார்ப்பேன். ஒரு பெஸ்ட் கலெக்‌ஷனே வெச்சிருக்கேன். சரி, உன்னோட ஆசைகள் என்ன, சொல்லு."

"சொன்னா?"

"நிறைவேற்றுவேன் - ஒவ்வொண்ணா!"

"உங்களால முடியுமா?"



"பணத்தால நிறைவேத்த முடியற எல்லா ஆசைகளையும் என்னால நிறைவேத்த முடியும்."

"சொல்லட்டா? விதவிதமா இருபது ட்ரெஸ் வாங்கணும்."

"இருபது போதுமா?"

"நீச்சல் குளத்தோட இருக்கற பங்களால வசிக்கணும்."

"எங்க வீடு பங்களா மாதிரிதான் இருக்கும். ஆனா நீச்சல் குளம் இல்லை. ஸ்டார் ஹோட்டலுக்குக் கூட்டிட்டுப் போறேன். எதிர்காலத்துல அப்படி ஒரு பங்களா கட்டலாம். அப்புறம்?"

"உலகத்தில இருக்கிற எல்லா முக்கியமான நாடுகளுக்கும் டூர் போகணும்."

"செஞ்சிடலாம். இன்னும்..."

"நாலு குழந்தை பெத்துக்கணும். ரெண்டு பையன்! ரெண்டு பொண்ணு! இது பணத்தால சாதிக்கிற விஷயம் இல்லை" என்றவள் அவன் கண்கள் கலங்குவதைப் பார்த்துப் பதறினாள்.

"என்னாச்சு? நான் ஏதாச்சும் தப்பா சொல்லிட்டேனா?"

"இல்லை" என்றான்.

பூஜாவிடம் இதைப் பற்றிப் பேசிய போது, மீசையோடு ஒன்று, மீசையில்லாமல் ஒன்று என்று அவள் சொன்ன நினைவு வந்து மனம் கலங்கியதை எப்படிச் சொல்வேன்?

"பேசி முடிச்சிட்டீங்களா, இன்னும் பாக்கி இருக்கா?" என்று கேட்டபடி உள்ளே வந்த அம்சாவைப் பார்த்ததும் எழுந்து கொண்டான் குமரன்.

"உங்களுக்காகத்தான் காத்திருந்தேன்; புறப்படறேன்."

"உங்க நண்பர் வரட்டும்; உக்காருங்க."

"வழில ஏத்திக்கிறேன். வர்றேன்" என்றவன் மஞ்சரியிடம் கண்களால் சொல்லிவிட்டு வாசலுக்கு நடந்தான்.

சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்திலிருந்து வெளியே வந்த ஆகாஷ் ஜீன்ஸும், அதே துணியில் முழுக்கைச் சட்டையும் அணிந்திருந்தான். கூலிங்கிளாஸ் அணிந்திருந்தான். கையசைத்து டாக்ஸியை அழைத்து ஏறி அமர்ந்தான்.

"பெசன்ட் நகர்" என்றான்.

கார் புறப்பட்டதும் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டான். செல்போன் எடுத்து ஆங்கிலத்தில் பேசினான்.

பெசன்ட் நகர் வந்ததும் ஆகாஷ் ஒரு சீட்டைப் பார்த்து விலாசம் சொன்னான். இறங்கிக் கொண்டு பணம் தந்தான். தனியாகப் புறப்பட்ட படிகளில் ஏறி அந்த மாடி போர்ஷனுக்கு வந்து அழைப்பு மணியை அழுத்தினான்.

கதவைத் திறந்த பூஜா இவனைப் பார்த்து அதிர்ந்தாள்.

"எங்க வந்தே?"

"என்னடி கேள்வி இது? ஒண்ணு புருஷன் வீட்ல பொண்டாட்டி இருக்கணும்; இல்லை, பொண்டாட்டி வீட்ல புருஷன் இருக்கணும்."

"அதான் எந்த உறவும் வேணாம்னு டைவர்சுக்கு அப்ளை பண்ணிருக்கோமே..."

"இன்னும் கிடைக்கலையே... அது வரைக்கும் நீ என் பொண்டாட்டிதான், நான் உன் புருஷன்தான். நகரு, நிறைய வேலை இருக்கு. முதல்ல குளிக்கணும்" என்று உள்ளே நுழைந்தான் ஆகாஷ்.

(தொடரும்)

"ஆபரேஷனுக்கு ஏன் இவ்வளவு பயப்படறீங்க...?"
"ஜோதிடர் ஒருத்தர் என் கைரேகையைப் பார்த்துட்டு கத்தியால கிழிச்சுதான் எனக்கு உயிர் போகும்னு சொல்லியிருக்கார் டாக்டர்!"
- சீர்காழி வி. ரேவதி



மகத்துவமான தொடர்.

- த. சத்தியநாராயணன், அயன்புரம்



அன்பெனும் புனித மழையில் நனைந்து, மாதா அமிர்தானந்தமயி உடன் ஆன்மிகப் பயணம் மேற்கொண்ட அற்புத அனுபவம் பெற்றேன் தொடர் மூலம்!

- கே.என்.பாலகிருஷ்ணன், கும்பகோணம்

கல்கி பிறந்தநாள் விழா ஒரு சர்க்கரைப் பந்தல். சவிதா நரசிம்மனின் இன்னிசை தேன்மழை.

- ஜே. துரைராஜ், சென்னை

ஜோ - சூர்யா திருமண நேரடி ஒளிபரப்புக்கு சிவகுமார் மட்டும் 'யெஸ்' சொல்லியிருந்தால் அவ்ளோதான்...!

- டீ.என்.பாலகிருஷ்ணன், சென்னை

அரசியலில் ஒரு கால்; அரிதாரத்தில் ஒரு கால் வைத்தால், அது ஆபத்தை விலைக்கு வாங்கி விடும். எஸ்.வி.சேகர் யோசித்துச் செயல்படட்டும்!

- இரா.சு.பிரகாசம், திருச்சி

# அவ்ளோதான்!



ஸ்டாலினை மதுரை அ.தி.மு.க. எம்.எல்.ஏ. அர்ச்சிப்பதும், அதைப் பார்த்து சேடப்பட்டி முத்தையா தலையைச் சொரிவதுமான கார்ட்டூன் கலக்கல் வாத்யாரே!

- ரேவதிப்ரியன், ஈரோடு

நவராத்திரி சமயத்தில் உலகுக்கு நன்மை தரக்கூடிய விஷயங்களை சுதாசேஷய்யன் மூலம் வெளியிடுவது என்னைப் போன்ற பக்தர்களுக்கு மிகப்பெரிய வரப்பிரசாதம்.

- கோமளா ரங்கநாதன், சென்னை - 17

தமிழகம் ஒரு பூங்காதான். அதில் சந்தேகமில்லை. அமைதியா? ஆயுதமா? என்பதைத் தீர்மானிப்பது அரசியல்வாதிகள்தான் என்பதைத் தலையில் குட்டி, தலையங்கம் மூலம் தெரிவித்து இருக்கிறீர்கள்.

- சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

சூப்பர் மார்க்கெட்டில் விஜயராகவனின் கவிதை சிரிக்க மட்டுமல்ல, சிந்திக்கவும் வைத்தது. ஐந்தறிவுகளின் கழிவுகள் மண்ணுக்கு உரம். மனிதனின் கழிவுகள் மண்ணுக்குப் பாரம்!

- என். சீதாலட்சுமி, பொள்ளாச்சி

அம்மா என்றால் அன்பு என்பதை 24 வாரங்களில் அமிர்தமாகப் பொழிந்திருக்கிறீர்கள். அமிர்தமானாலும் அளவுக்கு மீறி விஷமாகாமல், விஷயங்களை அளவோடு விளக்கிய விதம் மனதுக்கு நிறைவு தந்தது.

- என். கௌரி, கோயமுத்தூர்

பிறந்தநாளன்று ஒரு தீய பழக்கத்தை விட்டொழிக்க வேண்டும் என்ற அன்பான அறிவுரையோடு அன்பெனும் மழையிலே நிறைவுற்ற விதம் கண்டு மனது நிறைந்து போனது. மறக்க முடியாத... மறக்கக் கூடாத

● என். அந்தோணி பிச்சை, தூத்துக்குடி- 2.

? ராமையா என்ற தமது பெயர் தமிழகத்துக் குக் கேவலம் என்று

! அந்தக் குழு அதிகாரபூர்வமானது அல்ல என்பது டன் அந்த எம்.பிக்கள் அனைவரும் தமிழ் தேசிய கூட்டணியைச் சேர்ந்தவர்கள். இந்த அமைப்பு விடுதலைப் புலிகள் சார்பானது. பிரதமர் இவர்களைச் சந்திக்க நேரம் ஒதுக்காதது சரியே. அயலுறவுத்துறை அதிகாரிகள் சிலரைச் சந்தித்துள்ளனர். இப்போது

# கிருஷ்ணனுக்கு ஜீன்ஸ் அலங்காரமா?



● சட்டத் தடை!



● போராளி குணம்!

எண்ணி அதனை 'அன் பழகன்' என்று மாற்றிக் கொண்டதாகச் சொல் கிறாரே நிதியமைச்சர்?

! 'அன்பழகன்' என் பதை அந்த இரட்டைப் பண்புகளின் உறைவிட மான ஸ்ரீராமனின் மறு பெயராகவே கொள்ளலாம். அன்பழகன் என்ற பெயர் பூண்டவர்கள் எல்லோ ருமே தமிழகத்தைக் கேவ லப்படுத்தாமல் பெருமை சேர்த்தால் மகிழ்ச்சிதான்.

● ஆர். நாகராஜன், சென்னை - 117.

? இலங்கையிலிருந்து வந்த எம்.பி.க்கள் குழுவை பிரதமர் சந்திக்க மறுத்தது சரியா?

கலைஞருக்கு இக் குழு வலைவீசி வருகிறது. சிக்கி விடக் கூடாது, அவர்.

● மு. பெரியசாமி, விட்டுக்கட்டி.

? உள்ளாட்சி அமைப் புகளுக்கும் கட்சித் தாவல் தடைச்சட்டம் கொண்டுவர வேண் டும் என்று ஜெய லலிதா யோசனை தெரிவித்துள்ளதைப் பற்றி...?

! உள்ளாட்சி அமைப்புகளுக்கான தேர்தல்களில், கட்சி சார்பில், கட்சி

தராசு

சின்னத்தில் போட்டிபோடக் கூடாது என்று சட்டம் கொண்டு வருவதுதான் அர்த்தமுள்ளதாக இருக்கும். இந்தத் தேர்தலில் அரசியல் அதிகமாகப் புகுந்து, உள்ளாட்சி அமைப்பு என்பதையே அர்த்தமற்றதாக்கிவிட்டது.

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33.

? ஒசாமா பின்லேடன் இறந்து விட்டதாக ஃபிரெஞ்சுப் பத்திரிகை செய்தி வெளியிட்டதே...?

! எந்த ஒரு செய்தியும் நிஜம் என்று நிரூபிக்கப்படும் வரை பொய்தான். இச் செய்தியை ஒசாமாவே பரவவிட்டிருந்தாலும் வியப்பதற்கில்லை!



● மறுப்புரிமை!

● முத்தம் செல்வக்குமார், முத்தம்பட்டி. ✱

? செல்வமும் வறுமையும் ஒரே மனிதனிடத்தில் நிலைகொள்ள சாத்தியமுண்டா?

! உண்டு. கைநிறையப் பணமும் உள்ளத்தில் வறுமையும் இருக்கிறபோது; கையிலே காலணா காசு இல்லாவிட்டாலும், உள்ளம் செழுமையாய் இருக்கிறபோது.

● கு. ஜெயபாலன், மதுரை - 4.

? இரண்டு கோடி ரூபாய் பிறந்தநாள் பரிசு பெற்றதாகத் தொடரப்பட்ட வழக்கில் ஜெ.வுக்குக் குற்றப்பத்திரிகை வழங்கப்பட்டிருக்கிறதே...?

! அப்பாடி! ஒருவழியா குற்றப்பத்திரிகை தாக்கல் ஆகியிருக்கு. இனி வழக்கு நடந்து, வாய்தா மேல் வாய்தா வாங்கி, மேல் முறையீடு நடந்து, அங்கே தாமதங்களை உருவாக்கி, மறுபடி கீழ் கோர்ட்டுக்கு வந்து, அப்புறம் மேல் கோர்ட்டுக்குப் போய்...



● நல்லுறவுச் சமாதி!

● எம். ராஜேந்திரன், லால்குடி.

? செப்டெம்பர் 22-ல் நடந்த மலேசிய முத்தரப்பு கிரிக்கெட் போட்டியில் நடுவர்கள் தங்கள் தீர்ப்பை இரண்டு முறை மாற்றியுள்ளனரே?

! டி.வியும் ஸ்லோமோஷன் கேமரா ஒளிபரப்பும் தோன்றிய பிறகு, மைதானத்தில் இரு அம்பயர்களும் கொஞ்சம் தன்னம்பிக்கை இழந்துதான் காணப்படுகிறார்கள். தீர்ப்பு வழங்கிய பிறகு வாபஸ் பெறுவதற்குப் பதில், அதை வழங்கும் முன்னரே மூன்றாவது அம்பயரைக் கலந்தாலோசிப்பது நல்லது.

● எஸ். சக்தி, வி.கே. புரம்.

? உ.பி. மாநில அமைச்சர் ஒருவரே ரயிலில் டிக்கெட் இல்லாமல் பயணம் செய்திருக்கிறாரே - இதற்காக வெட்கப்பட வேண்டியது யார்?

! அவருக்கு வாக்களித்த மக்கள்தான்.

● மு. தமிழ்ப்பாண்டியன், சென்னை - 49. ❑

? எளிமையின் உருவமான காமராஜரைப் பற்றிய படத்தையே யாரும் பார்க்க முன்வரவில்லை. கடவுளைப் பழித்த பெரியாரைப் பற்றிய திரைப்படத்தை தி.க.காரர்களன்றி வேறு யார் பார்ப்பார்கள்? இதற்கு அரசு வீண் செலவு செய்ய வேண்டுமா?

! பெரியார், மூடநம்பிக்கையை ஒழிக்கவும் சமூகச் சீர்திருத்தங்களுக்காகவும் போராடினார்; சுதந்திரப் போராட்டவீரரும் கூட. நாத்திகம் என்பது அவருடைய ஆளுமையின் ஒரு பகுதிதான். இந்தத் திரைப்படம் சரியான கோணத்தில் சிறப்பாக எடுக்கப்பட்டால், ஆத்தி

❑ ரூ. 100 பரிசு பெறுபவர்:

மு. தமிழ்ப்பாண்டியன்,
109, மூன்றாவது பிரதான சாலை,
பாபா நகர், வில்லிவாக்கம்,
சென்னை - 600 049.

கர்களும் பெரியாரை முழுவதுமாகப் புரிந்துகொள்ள உதவும். அரசுக்கு இது வீண் செலவா இல்லையா என்பதை, படம் ரிலீஸான பிறகே நிர்ணயிக்க முடியும்!

● டி. முருகேசன், திருவாரூர்.

*? கியூபா நாட்டில் முஷாரஃப் நமது பிரதமரைச் சந்தித்து ஒரு மணி நேரம் பேசியிருக்கிறாரே, இதனால் காஷ்மீர் பிரச்னைக்குத் தீர்வு ஏற்பட வாய்ப்பு உண்டா?*

! எங்கே! முஷாரஃப்தான் அங்கிருந்து திரும்பிய கையோடு தமது புத்தகத்தை வெளியிட்டு, சர்ச்சையைக் கிளப்பி, இந்தோ-பாக் நல்லுறவுக்குச் சமாதி கட்டி விட்டாரே!

● வி. ஷியாம், கும்பகோணம்.

*? மாணவர்களின் தலைமுடி நீளமாக இருந்தது என்று வெட்டி விட்ட காஞ்சிபுரம் பள்ளித் தலைமை யாசிரியர் விவகாரம் குறித்து...?*

! மென்மையான மனங்களில் மாறாத வடுவை ஏற்படுத்தும் முரட்டுக் காரியம். இது மட்டுமா...? ஒரு பெண் மீது கொலைக் குற்றம் சாட்டி ஊர் மக்கள் அவளை மின்கம்பத்தில் கட்டி வைத்து அடித்திருக்கிறார்கள். குடித்துவிட்டு கலாட்டா செய்த ஒருவனை போலீஸார் நடுத்தெருவில் நிர்வாணமாக்கி உதைத்திருக்கிறார்கள். இப்படி தண்டல்நாயகம் உருவாகக் காரணம் என்ன? தலைவர்கள் யோசிக்கட்டும்.

• செய்தி மரணம்!

● என். சீதாலட்சுமி, பொள்ளாச்சி.

*? இந்த வருடம் காந்தி அமைதி விருது ஷபானா ஆஸ்மிக்குக் கிடைத்திருப்பது பெருமைக்குரியதுதானே?*

! ஆமாம்! வெள்ளித் திரைக்கு வெளியேயும் கொள்கையும் கௌரவமும் மிக்க வாழ்க்கை நடத்தி வரும் சமூகப் போராளியாயிற்றே.

● து. தியாகராஜன்,
திண்டுக்கல் - 1

*? 'நான் ஆட்சிக்கு வந்தால் கள்ளுக் கடைகளை மீண்டும் திறப்பேன்' என்று தே.மு.தி.க. இரண்டாம் ஆண்டு விழாவில் விஜயகாந்த் பேசியுள்ளாரே?*



• மறு பெயர்!

! உள்ளாட்சித் தேர்தலையொட்டிய முன் யோசனையற்ற ஸ்பெஷல் அறிவிப்பு இது... பெண்களின் வாக்குகளை இழக்க நிச்சயமான வழியும் கூட. டாஸ்மாக் கடைகளை மூட பாடுபடுவேன் என்று அவர் பேசியிருக்க வேண்டும்!

● அ.யாழினி பர்வதம்,
சென்னை - 112.

*? உ.பி. மாநிலம் பிருந்தாவனத்திலுள்ள கிருஷ்ணருக்கு ஜீன்ஸ்-டீ ஷர்ட் அணிவித்து, கையில் செல்போன் கொடுத்து அலங்கரித்தது பற்றி...?*

! இறைவனுக்குப் பலவித அலங்காரங்கள் செய்து பார்த்து மகிழ்வது பக்தியின் ஒரு வெளிப்பாடுதான். ஆனால் இது மரபு சார்ந்து இருப்பதே நல்லது; 'டூ மச்'சாகப் போகக் கூடாது. அடுத்து, செல்போனில் கண்ணபிரான் என்னுடன் பேசினார் என்றுகூட சிலர் ஆரம்பிக்கக்கூடும்!

* ரூ. 50 பரிசு பெறுபவர் :
முத்தம் செல்வகுமார்,
முத்தம்பட்டி அஞ்சல்,
சேசன்சாவடி வழி
சேலம் - 636 111.



* படம் : யோகா

